# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Saturday, 21st January 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Export and import of rice*

*** 41** *Q.*—SRI S. M. ANNAMALAI : *கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*1960-ல் ஆந்திர மாநிலத்திலிருந்து சென்னைக்கு வந்த அரிசியும், சென்னை மாநிலத்திலிருந்து மற்ற மாநிலங்களுக்கு அனுப்பப்பட்ட அரிசியும் எவ்வளவு ?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM : According to the statistics collected by this Government, a total quantity of 84,600 tons (roundly) of paddy and rice moved into this State between January and October 1960 from the Andhra Pradesh, while a quantity of 328,000 tons (roundly) moved from this State to Kerala during the same period.

SRI S. M. ANNAMALAI : *பிற மாகாணங்களில் இருந்தும், ஆந்திரா மாகாணத்திலிருந்தும் நம் மாகாணத்திற்கு அரிசி வந்திருந்தும், ஏன் விலைவாசி விஷம்போல் ஏறிக்கொண்டே போகிறது ? இதைத் தடுக்க அரசாங்கம் முன்வருமா ?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM : *விலைவாசி ஏறுவதற்கு எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன. இதைப்பற்றி பொருளாதார நிபுணர்கள் ஆராய்ந்து வருகின்றனர். அவர்களின் யோசனையின் பேரில் நடவடிக்கை எடுக்கப்படும். நம் மாகாணத்தில் தேவைக்கு மேலும் உற்பத்தியாகிக்கொண்டுதான் இருக்கிறது. ஆகவேதான் கேரளாவிற்கு 3 லட்சம் டன் அரிசி கொடுத்து வருகிறோம்.*

SRI V. K. KOTHANDARAMAN : *விலைவாசி உயர்விற்கு பிரதான காரணம் பதுக்கல்தான் என்று ஆராய்ச்சி செய்த நிபுணர்கள் கூறுகிறார்கள். இதைத் தடுப்பதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டது ?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM : *நான் உறுதியாகச் சொல்வேன் நம் மாகாணத்தில் பதுக்கல் இருக்கிறதென்று சொல்வதற்கு இடமில்லை என்று. இங்கு விலை கட்டுப்பாடு ஒன்றும் இல்லை. விலை உயர்வு ஓரளவு குறைந்துக் கொண்டு வருகிறது.*

[21st January 1961

*Corruption Enquiry Committee*

* 42 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

லஞ்ச ஊழல் விசாரணைக் கமிட்டியில் ஒரு மெம்பராக உள்ள சென்னை அட்வகேட் ஜெனரலை மத்திய சர்க்கார், சென்னை சர்க்காரைக் கலந்து நியமித்தார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : லஞ்ச ஊழல் விசாரணைக் கமிட்டி, மத்திய அரசாங்கத்தால் அமைக்கப்பட்டதல்ல. ஆகவே சென்னை சர்க்காரைக் கலந்து மத்திய சர்க்கார் நியமனம் செய்தார்களா என்ற கேள்விக்கு இடம் இல்லை.

SRI S. M. ANNAMALAI : இந்த லஞ்ச ஊழல் விசாரணைக் கமிட்டி மாநில அடிப்படையில் ஏன் அமர்த்தக்கூடாது. அதிகாரிகளின் லஞ்ச ஊழல்கள் எங்கு பார்த்தாலும் இருப்பதால் ஏன் நம் மாநிலத்திலும் ஒரு கமிட்டி அமைக்கக்கூடாது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எங்கு பார்த்தாலும் லஞ்ச ஊழல் என்று சொன்னால், சபையில் இருக்கும் அங்கத்தினருக்குக்கூட பாதகம் ஏற்படும். ஆகையால் அப்படிச் சொல்ல வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன்.

*Education of the dumb*

*43 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் சென்னை ராஜ்யத்திலே ஊமையர்களின் கல்வி, தொழில் அபிவிருத்திக்காக எத்தனை பள்ளிக்கூடங்கள் (1) அரசாங்கத்தாராலும், (2) தனிப்பட்டவர்களாலும் நடத்தப்பட்டு வருகின்றன ?

(இ) எத்தனை பேர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM :

| | | |
|---|---|---|
| (*a*) | Government Schools ... ... ... | Nil. |
| | School under Local Bodies ... ... ... | 2 |
| | Private Schools ... ... ... ... | 3 |

All these five schools are schools for the Deaf and Dumb offering general education with pre-vocational bias. There are no separate schools for the Deaf and the Dumb exclusively for imparting vocational training.

(*b*) The number of pupils receiving general education as on 31st March 1960 was as follows :—

| | |
|---|---|
| Boys ... ... ... ... ... | 425 |
| Girls ... ... ... ... ... | 387 |

21st January 1961]

SRI A. A. RASHEED : May I know, Sir, the amount of grant given to the Deaf and Dumb Schools run by private Associations?

THE HON. SRI C. SUBRAMANIAM : I have not got those figures now.

## *Pumpsets.*

MR. SPEAKER : As the hon. Member who gave notice of Q. 44 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

* 44 *Q.*—SRI K. R. NALLASIVAM : கனம் பொதுமராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருச்சி ஜில்லா, கரூர் தாலுக்கா, புகலூர் பகுதியில் காவிரி ஆற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக்கொள்ள எத்தனை பம்ப் செட்டுகளுக்கு சமீபத்தில் அனுமதி வழங்கப்பட்டது?

(இ) அதன் மூலம் பலன் பெறும் நிலங்களின் விஸ்தீரணம் என்ன?

(உ) எத்தனை மாதங்களில் தண்ணீர் எடுத்துக் கொள்ளலாம்?

THE HON. SRI P. KAKKAN :

(*a*) Three cases.

(*b*) 406.08 acres.

(*c*) Five months.

## *Central Government Employees Strike*

MR. SPEAKER : I think questions 45, 46 and 80-A relate to the same subject and they will be taken up together.

* 45 *Q.*—SRI S. PAKKIRISAMI PILLAI :
SRI M. KALYANASUNDARAM : } Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of political leaders arrested on the eve of the sympathetic General Strike in connection with the recent Central Government Employees strike; and

(*b*) the number of political leader's that were charge sheeted on the alleged contravention of section 3 and or section 5 of the recent ordinance of the President?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Fifteen political leaders were arrested in connection with the sympathetic General Strike, 11 on 13th July 1960 and 4 on 14th July 1960.

(*b*) Sixteen political leaders were charge-sheeted under section 5 of the Essential Services Maintenance Ordinance. All the cases have since been withdrawn.

[21st January 1961

* 46 Q.—SRI A. VEDARATHNAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கிழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மத்திய அரசாங்க ஊழியர்கள் செய்த வேலை நிறுத்தம் காரணமாக நம் மாநிலத்தில் அங்கிகாரம் ரத்தான லேபர் யூனியன்கள் எவை ?

(இ) அங்கிகாரம் ரத்து செய்யப்பட்டபின் அந்த யூனியன் கள் நடைபெறுகின்றனவா ?

(உ) அப்படியானல், அரசாங்கம் இதன்பேரில் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) The State Government have not issued orders withdrawing the recognition of any Labour Union consequent on the strike by the Central Government Employees. This is a matter concerning the Central Government.

(b) & (c) Do not arise.

* 80-A Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state whether there were lathi charges on the public on 14th and 15th July 1960 in this State in connection with the Central Government Employees' Strike?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There was a mild lathi charge in front of the Perambur Railway Carriage Works on the morning of 14th July 1960 when some persons were arrested on charges of inciting loyal workers. The crowd was composed largely of striking employees and of a few outsiders.

There was no lathi charge on the 15th July 1960.

SRI S. PAKKIRISWAMI PILLAI : அன்றைய தினம் தொழிற் சங்கத் தலைவரையோ, வேறு கட்சித் தலைவரையோ அற்ப காரணத்திற்காக சிலர் மீது வழக்கு தொடர்ந்து கோர்ட் டிற்கு முன்னல் நிறுத்திய போலீஸ் அதிகாரிகள் மீது என்ன நட வடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத் தினரைச் சேர்ந்த கட்சி அரசாங்கத்தில் இருக்கும்போது அம் மாதிரி நடவடிக்கை எடுக்கலாம். கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்னது போல் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது. அற்ப காரணத்திற்காக ஒன்றும் இல்லை. அவசர சட்டத்தை பிரயோகித்து பெரியவர்கள் என்றும் சிறியவர்கள் என்றும் பாரா மல் அந்த வகையில் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது. வேலை நிறுத்தத்தை வாபஸ் பெற்ற பிறகு தலைவர்கள் மீதுள்ள வழக்குகளை வித்டிரா பண்ணவேண்டுமென்று கேட்டுக்கொண் டார்கள்.

21st January 1961]

**Sri A. VEDARATHNAM :** சர்வ வல்லமையுள்ள அரசாங்கத்தை திணர அடித்த தொழிற்சங்கம் தனியார் தொழிலேயும் நசுக்குவதற்கும் ஏன் முயற்சி செய்ய மாட்டார்கள். ஆகையால் தேசத்துரோகக் குற்றத்திற்காக தொழிற்சங்கத்தின்மீது திட்டவட்டமான நடவடிக்கை எடுக்கும்படி மத்திய சர்க்காருக்கு இந்த சர்க்கார் தெரிவிக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்னது போல் அரசாங்கம் ஒன்றும் திணர அடிக்கப்படவில்லே. வேலே நிறுத்தம் பிசுபிசுத்து போய்விட்டதென்று பத்திரிகைகளிலெல்லாம் போடப்பட்டது. சட்ட விரோதமான ஒரு காரியம் ஏற்பட்டால் அப்பொழுது நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படும். அனுவசியமான காரியங்களுக்கு அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளாது.

Sri A. A. RASHEED : Sir, among the arrested persons, may I know the number who expressed their regret for joining the strike?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : I have no information, Sir.

Mr. SPEAKER : The hon. Member when putting questions must not make any insinuation as 'Desa Droha', etc.

Sri K. VINAYAKAM : May I know, Sir, what are the precautionary measures that Government are taking to avert such untoward strike which might take place in future?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : The hon. Member is quite well aware that the Governments both at the Centre and in the State took all necessary action to face it, although some leaders thought that the Government administration would be paralysed. But no such thing happened. The hon. Member may be quite well aware that the Government will take necessary steps whenever it is necessary.

**Sri N. R. THIAGARAJAN :** வேலே நிறுத்தத்தில் கலந்துக் கொண்டவர்கள்மீது என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப் பட்டது ? எத்தனே பேர்கள் வேலேயிலிருந்து நீக்கப்பட்டார்கள் ? இப்படிப்பட்ட தேசத்துரோகத்திற்காக கடுமையான சட்ட திட்டங்கள் வகுக்கப்படுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** வேலே நிறுத்தத்தை சமாளிப்பதற்கு அவசரச்சட்டம் பிறப்பிக்கப்பட்டது. சட்டத்தை மீறுபவர்கள் மீது அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொண்டது. பின்னுல் வேலே நிறுத்தம் வாபஸ் பெற்று வேலே நிறுத்தம் செய்தவர்கள் மீது என்ன நடவடிக்கை எடுக்க வேண்டுமோ அவைகளெல்லாம் எடுக்கப்பட்டது.

[21st January 1961

MR. SPEAKER : கனம் அங்கத்தினர்கள் ஸ்ரீ தியாகராஜன் அவர்களும் ஸ்ரீ வேதரத்தினம் அவர்களும் "தேசத்துரோகம்" போன்ற வார்த்தைகள் உபயோகப்படுத்தினுர்கள். இனி இம் மாதிரி கேள்வி நேரங்களில் கடுமையான வார்த்தைகள் உபயோகப்படுத்த வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : சட்ட ரீதியாக அவர்களுடைய உரிமைகளை பெறுவதற்காக வேண்டி நடந்த அந்த போராட்ட நேரத்திலே அந்தப் போராட்டத்தை உடைப்பதற்கு கருங்காலி வேலை செய்தவர்கள் எத்தனை பேர்கள்? அவர்கள் பேரில் ஏதாவது நடவடிக்கைகள் எடுக்க சர்க்காருக்கு உத்தேசமுண்டா?

MR. SPEAKER : இப்பொழுது வேதரத்தனம் பிள்ளை அவர்களுக்குச் சொன்னதை உங்களுக்கும் சொல்கிறேன். அவர்கள் ஒரு வழியில் கேட்டார்கள், நீங்கள் வேறு வழியில் கேட்கிறீர்கள்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த வேலை நிறுத்தம் சட்ட ரீதியாக நடைபெறவில்லை. அவசரச் சட்டம் போட்ட பிறகு நடந்தது, சட்டத்திற்கு விரோதமாக. இதில் கலந்து கொண்டவர்கள்தான் சட்டத்திற்கு விரோதமாக நடந்து கொண்டவர்கள். மேலே நான் அவர்களைப் பற்றி குறிப்பிடவில்லை.

SRI A. A. RASHEED : May I know the extent of damage caused to the Government property during the general strike?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I am sorry. I have no such information with me. But I may tell the hon. Member that there is not any considerable damage on account of the strike.

*Artesian wells*

* 47 *Q.*—SRI T. R. RAMAMIRTHA THONDAMAN (on behalf of SRI S. RAMALINGA PADAYACHI) : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருச்சி ஜில்லா, உடையார்பாளையம் தாலுக்காவில் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நீர் ஊற்றுக்கிணறுகள் தோண்டும் உத்தேசம் உண்டா?

(இ) அப்படியாயின் எங்கே, எவ்வளவு செலவில் தோண்டப்படும்?

21st January 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir. There is no such proposal at present. A scheme for sinking artesian wells in the State has been included in the Third Five-Year Plan, but the selection of areas where the wells are to be sunk will be decided only when the scheme for each year during the Plan period is formulated and sanctioned.

(*b*) Does not arise.

SRI S. LAZAR : ஆர்டீஷன் வெல்ஸ் போடுவதற்கு அங்கு வாய்ப்பிருக்கிறதா? அப்படியானால் அதை எடுத்துக்கொள்வதற்கு அரசாங்கத்திற்கு என்ன தடையிருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : உடையார்பாளையம் தாலுக்காவில் ஆர்டீஷன் வெல்ஸ் போட வாய்ப்பு இருக்கிறது. ஏற்கனவே 50 கிணறுகள் எடுப்பதற்கு சாங்க்ஷன் செய்யப்பட்டிருக்கிறது. அது கவனிக்கப்பட்டு வருகிறது. ஆனால் இந்தக் கேள்வி மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் உடையார்பாளையத்திற்கு எவ்வளவு என்பது. ஒவ்வொரு தாலூக்காவிற்கும் எவ்வளவு என்று இன்னும் நிர்ணயிக்கப்படவில்லை. அப்போதைக்கப்போது கவனிக்கப்படுமென்று விடையளித்தேன்.

SRI S. LAZAR : அங்கிருக்கக்கூடிய குடிதண்ணீர் பிரச்னை மிகவும் கடுமையாக இருப்பதால் இதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்ப்பதால் குடிதண்ணீர் பிரச்னை தீரும் என்ற அடிப்படையில் அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டமில்லை, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயே 50 ஆர்டீஷன் வெல்ஸ் சாங்க்ஷன் செய்யப்பட்டதென்று சொன்னேன். அந்தந்த ஆண்டில் என்னென்ன முடியுமோ அவை எடுத்துக்கொள்ளப்படும்.

*Pension rules*

* 48 *Q*.—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the pension rules have been revised to benefit retiring persons ; and

(*b*) if so, the details thereof and the reasons therefor?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(b) A statement [a] is placed on the table of the House.

SRI T. S. RAMASWAMI : May I know the number of persons who have been benefited by this change?

THE HON. SRI C. SUBRAMANIAM : The number of persons who will benefit will be the number of persons who will retire after 1st July 1960.

---

[a] Printed as Appendix I on pages 233–234 infra.

[21st January 1961

*Prohibition case*

*49 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether it is a fact that a Police Head Constable of Town Vellore South Police Station, North Arcot has been suspended for charge sheeting a wrong person in a prohibition case; and

(*b*) if so, the present stage of the investigation?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir,

(*b*) The real accused was sentenced under the Prohibition Act. The accused and the person impersonated were charged under the Indian Penal Code and the person impersonated was sentenced. The Head Constable who was suspended has been reduced permanently as a Police Constable.

SRI A. A. RASHEED : Is it a fact that the complainant in a prohibition case was charge-sheeted and prosecuted?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It is not correct to say that the complainant was charge-sheeted and prosecuted. There was impersonation. Some other person came and said that he was the person who was accused and he was convicted.

*Vasectomy*

*50 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether the Government have instructed Doctors in the Hospitals to adopt reversible technique in Vasectomy?

THE HON. SRI M A. MANICKAVELU : No, Sir.

SRI A. A. RASHED : Is it a fact that in some Government hospitals this reversible technique in Vasectomy has been successfully tried and may I know why it has not been introduced as a general practice in other hospitals?

THE HON. SRI M. A. MANICKAVELU : The conditions under which the Vasectomy operation is performed are very comprehensive and there will be no necessity for any reversible techinque. I find that in Bombay one doctor has experimented this reversible technique and out of seven cases in five cases there was pregnancy.

SRI K. VINAYAKAM : May I know the details of this reversible technique in Vasectomy?

THE HON. SRI M. A. MANICKAVELU : Well, if the hon. Member comes to my room, I shall give details as far as I know.

SRI A. A. RASHED : Will not this reversible technique help those parents who lose their children after undergoing this Vasectomy operation?

21st January 1961]

THE HON. SRI M. A. MANICKAVELU : As I said, it is not necessary. Only in the case of persons who have three children the Vasectomy operation is done. But there are cases where persons have lost more children and we cannot provide for all that.

*Aid from World Health Organization*

*51 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state the nature of help the Government have received from World Health Organization and United Nations International Children Emergency Fund for the Improvement of Public Health?

THE HON. SRI M. A. MANICKAVELU : A statement [a] is placed on the table of the House.

SRI K. SATTANATHA KARAYALAR : May I know the reasons for stopping the distribution of milk powder that has been received under this scheme?

THE HON. SRI M. A. MANICKAVELU : No. It would have been stopped if the stock had been exhausted. Otherwise, whatever is being received, is distributed to Maternity and Child Welfare Centres.

SRI K. SATTANATHA KARAYALAR : May I know whether it is a fact that the distribution of milk powder has not been properly done and the concerned Government Department is enquiring into it.

THE HON. SRI M. A. MANICKAVELU : I have no information about it.

*Vaigai Anicut buildings*

* 52 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் உள்விவகார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, வைகை அணைக்கட்டில் காலியுள்ள கட்டிடங்களில் அம்பர் சர்க்கா பயிற்சி ஸ்தாபனம் அமைக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir

SRI N. R. THIAGARAJAN : வைகை அணைக்கட்டில் காலியுள்ள கட்டிடங்களில் அம்பர் சர்க்கா பயிற்சி ஸ்தாபனங்கள் அமைக்காவிட்டாலும், வேறு உபயோகமுள்ள தொழில் நிலையங்கள் ஏற்படுத்த அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தனிக் கேள்வி கேட்டால் விடை அளிக்கப்படும்.

[a] Printed as Appendix II on pages 235-236 infra.

[21st January 1961

### *Rural Higher Institutes*

* 53 *Q.*—Sri A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்திலுள்ள ரூரல் ஹையர் இன்ஸ்டிட்யூட்டுகளில் தேறிய மாணவர்களை மேல் படிப்புக்கு நம் பல்கலைக் கழகங்கள் அனுமதிக்கின்றனவா ?

(இ) இல்லையானல், என்ன காரணம் ? பல்கலைக் கழகங்களில் இவர்களுக்கு அங்கீகாரம் கிடைக்க அரசாங்கம் ஏதேனும் முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறதா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) That matter rests entirely with the discretion of the Universities.

Sri A. VEDARATHNAM : உடல் உழைப்பிற்கு முக்கியத்துவம் வேண்டுமென்று கூறப்படுகிற இந்தக் காலத்தில் இந்த உடல் உழைப்பை ஆதாரமாகக் கொண்ட ரூரல் இன்ஸ்ட்டிட்யூட் மாணவர்களை பல்கலைக் கழகங்களில் அனுமதிக்கவில்லையென்றால் மேல் படிப்பிற்காக, அது நம் நாட்டின் எதிர்காலத்தைப் பாதிக்கக்கூடும் என்பதை உணர்ந்து அரசாங்கம் அவர்களை பல்கலைக் கழகங்ளில் அனுமதிப்பதற்கு முயற்சி எடுத்துக்கொள்ள முன் வருமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : மேல் படிப்பு என்று சொன்னல் மேல் படிப்பை பெறுவதற்கு ஓரளவு தகுதி வாய்ந்திருக்க வேண்டும். அந்தத் தகுதியிருக்கிறதா இல்லையா என்பதைப் பொறுத்துத்தான் மேல் படிப்பிற்கு இதை எடுத்துக் கொள்ளலாமா இல்லையா என்பது பற்றி முடிவு செய்யவேண்டும். இப்பொழுது இருக்கக்கூடிய சட்டப்பிரகாரம் சர்வகலாசாலை நடத்துகிற பரீட்சைகளில் பாஸ் செய்கிறவர்களைத்தான் மேல் பட்டப்படிப்பிற்கு எடுத்துக் கொள்ள முடியும். இதை இண்டர் யூனிவர்ஸிட்டி போர்ட் ஆலோசித்துக் கொண்டிருப்பதாக தகவல். வேறு தகவல் இல்லை.

Sri A. VEDARATHNAM : பல்கலைக் கழகங்களுக்கு தேவையான எல்லாத் தகுதியும் இருந்தபோதிலும்கூட இந்த ரூரல் இன்ஸ்டிட்யூட்டில் பாஸ் செய்த மாணவர்கள் அங்கு அனுமதிக்கப்படுவதில்லை. எனவே, தகுதியுள்ளவர்களையாவது அதற்கு ஏதேனும் தனி டெஸ்ட் வைத்து அதன் மூலம் இந்த மாணவர்களை அங்கு அனுமதிக்க அரசாங்கம் ஏதாவது வகை செய்ய முன்வருமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : இதற்கு இன்னொரு பரீட்சை வைப்பது என்றால் அது சர்வகலாசாலை பரீட்சையாகத்தான் இருக்க வேண்டும். பரீட்சை என்றால் எந்தவிதமான பரீட்சைகள் எழுதவேண்டுமென்று யூனிவர்ஸிட்டி பார்த்து திட்டம் போடவேண்டுமே தவிர, சர்க்கார் இதில் ஒன்றும் செய்ய முடியாது.

21st January 1961]

*Teaching of Geology, etc., in Colleges*

* 54 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இம்மாநிலத்தில் எந்தெந்த கல்லூரிகளில் பூகர்ப்ப இயல், கனி இயல், அணுசக்தி இயல் போதிக்கப்படுகின்றன ?

(இ) இல்லையானால், மேற்கண்ட பாடங்களைப் போதிக்க அரசாங்கம் என்ன ஏற்பாடு செய்ய உத்தேசம் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) A statement [a] is placed on the table of the House.

SRI A. VEDARATHNAM : மைனிங் இன்ஜினியரிங்-க்கு மாணவர்கள் வராத காரணத்தால் அது கைவிடப்பட்டதாக அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. நம் மாநிலத்தில் மைனிங் வேலைக்கு வாய்ப்பு இல்லை என்ற காரணத்தால் இதுவரை ஒருக்கால் இருக்கலாம். இப்பொழுது நெய்வேலி மைனிங் போன்ற வேலைகள் நம் மாநிலத்திலேயே இருக்கிற காரணத்தால் அந்த என்ஜினியரிங் பட்டப்படிப்பை அனுமதிப்பதுபற்றி அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : போதிய மாணவர்கள் வந்தால் கட்டாயம் யோசிக்கும்.

SRI A. VEDARATHNAM : ஆட்டாமிக் என்ஜினியரிங் எல்லாப் பல்கலைக் கழகங்களிலும் இப்பொழுது போதிக்கப் படுகிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அணுசக்தியைப் பொறுத்த படிப்பு பி.எஸ்ஸி., எம்.எஸ்ஸி.-யில் சொல்லிக்கொடுக்கப் படுகிறது. பிஸிக்ஸ்-டன் சேர்க்கப்பட்டிருக்கிறது. தனியாக என்ஜினியரிங் இல்லை.

SRI R. SRINIVASA IYER : How many students in the State have studied the mining course, as stated in paragraph 2 of this answer? How many graduates in mining of the Madras University are there? How many of them have been provided with employment in this State?

THE HON. SRI C. SUBRAMANIAM : My answer is that the mining course was started in the College of Engineering, Guindy, in 1960–61. That has been stopped. Therefore no question of " how many students graduated in that course " arises. I do not have the figures with regard to number of persons employed or employment prospect.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், மைனிங் என்சினியரிங் கற்றுக் கொடுப்பதற்கு சுமார் 50 லட்சம் ரூபாய் அளவில் கருவிகளை வாங்கி வைத்தும், மாணவர்கள் அதன் மூலமாக கற்றுக் கொள்வதற்கு இருந்தும் அங்கே இருக்கக்கூடிய பிரின்ஸிபாலி

---

a Printed as Appendix III on page 237 infra.

[21st January 1961

னுடையவும் ஆசிரியர்களினுடையவும் தகராறுகள் காரணமாகத் தான் இந்தப் பாடம் கற்றுக் கொடுப்பது நிறுத்தப்பட்டது என்று சொல்லப்படுவது உண்மையா ? இது விஷயமாக அரசாங்கத்திற்கு எழுதியிருந்ததின் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது கனம் அங்கத்தினர் அவர்களின் கற்பனையாகவோ அல்லது வேறு நபர்களின் கற்பனையாகவோ இருக்கலாம்.

*Water-supply to Jayankondan*

* 55 *Q.*—SRI S. LAZAR (on behalf of SRI K. R. VISWANATHAN :) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether there is any proposal under the Third Five-Year Plan to provide protected water-supply to Jayankondan town from Coleroon under the Comprehensive Water-supply Scheme;

(*b*) if so, the cost of the scheme; and

(*c*) the proportionate cost borne by the Panchayat Board, Jayankondan?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) & (*c*) Do not arise.

SRI S. LAZAR : இந்த ஜெயங்கொண்டபுரத்திற்கு தண்ணீர் வசதி செய்து கொடுக்கவேண்டும் என்ற கோரிக்கை அரசாங்கத்திற்கு வெகு காலத்திற்கு முன்பே கொண்டு வரப்பட்டிருக்கிறது. இதற்கு பல இடங்களிலிருந்தும் தண்ணீர் கொண்டுவரலாம் என்று சொல்லப்பட்டது. அப்படியானால் இங்கு தண்ணீர் கொண்டுவரும் திட்டத்தை தனியான ஒரு திட்டமாக அரசாங்கம் எடுத்துக் கொள்ளாததற்கு காரணம் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : This will come under the urban water-supply scheme. By the end of the Second Plan 50 municipalities and 14 major panchayats will have protected water-supply. During the Third Plan period all the municipalities in the entire State, viz., 66 municipalities and 41 major panchayats will have protected water-supply. I find Jayankondan is not one of the places included. If the Panchayat comes forward with sound financial resources, then the matter will be looked into.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : ஸார், ஜெயங்கொண்டான்புரம் பகுதிக்கும் உடையார்பாளையம் பகுதிக்கும் குடி தண்ணீர் கஷ்டம் அதிகமாக இருப்பதினால் அப்பகுதி மக்கள் பல வியாதிகளுக்கு ஆளாகின்றனர். சிலந்தி போன்ற வியாதிகள் அங்குள்ள மக்களுக்கு வருகின்றது. இதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்களிடத்தில் நேரிலேயே காட்டப்பட்டது. ஆகவே, அந்த இடங்களுக்கு கொள்ளிடத்தில் இருந்து லோயர் அணைக்கட்டு கீழ் புறம் மேல் புறத்திலிருந்து தண்ணீர் கொண்டு

வர வசதியிருக்கிறது என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இதைப்பற்றி சீக்கிரமாகவே ஆலோசனை செய்து அங்கு அவதிப்படும் மக்களுக்கு, அவர்களுக்கு இருந்து வருகின்ற இந்த தொல்லையை நீக்குவதற்கு சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: இப்போது எங்கே யிருந்து தண்ணீர் கொண்டு வருவது என்பது பிரச்னை அல்ல. எங்கிருந்து பணத்தைக் கொண்டு வருவது என்பதுதான் பிரச்னை.

SRI K. VINAYAKAM: ஸார், ஜெயங்கொண்டான்புரம் என்ற பெயர் வந்ததே அன்றைய அரசன் வடக்கே சென்று கங்கைத் தண்ணீரைக் கொண்டு வந்ததாக கதைகள் கூறுவதுதான். இந்த அடிப்படையில்தான் ஜெயங்கொண்டான்புரம், கங்கை கொண்டான் என்ற பெயர்கள் எல்லாம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இப்போது கங்கையிலிருந்து கொண்டு வராவிட்டாலும் சமீபத்திலிருந்து கிடைக்கின்ற தண்ணீரை கொண்டு வந்து கொடுப்பதற்கு எங்கிருந்தாவது பணத்தை கொண்டு வருவதற்கு சர்க்கார் முயற்சிக்குமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: கண் இல்லாத குருடனுக்கு கண்ணப்பநாயனுர் என்ற பெயர் இருப்பதை நாம் பார்க்கிறோம். (சிரிப்பு.)

SRI S. LAZAR: In the list of priorities read out by the Hon. Minister there are names of municipalities and panchayats which are already having drinking water-supply and yet provision is being made for giving them protected water-supply. So far as Jayankondan is concerned, there is no drinking water available there, leave alone protected water-supply. In view of this acute condition will the Government provide necessary funds and take up the scheme so far as Jayankondan is concerned.

THE HON. SRI M. A. MANICKAVELU: If the Panchayat moves in the matter, the matter will be looked into.

*Anti-Hindi agitation by the Students*

* 56 *Q.*—SRI S. M. ANNAMALAI: கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 16–8–1960-ந் தேதி இந்தி எதிர்ப்பு கோஷமிட்டுக் கொண்டு ஊர்வலமாக வந்து சென்னை சட்டக் கல்லூரி மாணவர் களும், பச்சையப்பன் கல்லூரி மாணவர்களும் முதல் அமைச்சர் அவர்களைச் சந்தித்தார்களா?

(இ) அப்படியானல் அவர்கள் கோரியது என்ன?

[21st January 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) This procession was organized by the students to express their concern over the speech of the President of India on the language issue on 15—8—1960 at Madras which, according to them, contained sentiments contrary to the assurances given by the Prime Minister of India. After meeting the Chief Minister, the students were convinced that there was no basis for their fears.

SRI A. A. RASHEED : Is it not a fact that a pact has been arrived at among the political parties that students should not be dragged into politics? If so, may I know the persons or parties behind this agitation?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not have the information whether any political party was behind this move. But as I already stated the procession was organized because of certain apprehensions created in the minds of students. When these apprehensions were removed, the situation became normal.

**SRI S. M. ANNAMALAI :** *ஸார், அந்த மாணவர்களுக்கு இந்தி கட்டாய பாடமாக ஆக்கப்படமாட்டாது என்று முதல் அமைச்சர் அவர்கள் வாக்குறுதி தந்திருந்தார்கள். ஆனால் இப்போது இந்தி மறைமுகமாக புகுத்தப்பட்டு வருகின்றது. அதை தடுப்பதற்கு சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது ?*

**THE HON. SRI C. SUBRAMANIAM :** *எந்த அடிப்படையில் இந்தி கற்றுக் கொடுக்கவேண்டும் என்பது பற்றி எல்லாக் கட்சித் தலைவர்களும் கலந்து ஆலோசித்து ஒரு முடிவு எடுக்கப் பட்டிருக்கிறது. அந்த முறையில்தான் இதற்கான கொள்கை வகுக்கப்பட்டிருக்கிறது. இதில் மறைமுகமோ அல்லது வேறு முகமோ இல்லை. நேர் முகமாகத்தான் வகுக்கப்பட்டிருக்கிறது.*

*Co-operative Stores*

* 57 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there is any proposal to set up co-operative stores throughout the State to supply food articles and other essential consumer goods at controlled rates; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

**SRI N. K. PALANISAMI :** *ஸார், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஜனங்கள் உபயோகிக்கும் பொருட்களுக்கு நியாய விலையை நிர்ணயிக்க வேறு ஏதாவது வழிகள் வகுக்கப் பட்டிருக்கிறதா ?*

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** *இதைப்பற்றி இப்போது உருவான யோசனை ஒன்றும் அரசாங்கத்தினிடத்தில் இருக்கிறது என்று சொல்வதற்கில்லை.*

21st January 1961]

*Marudayar Scheme*

* 58 *Q.*—SRI T. R. RAMAMIRTHA THONDAMAN (on behalf of SRI S. RAMALINGA PADAYACHI) : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருச்சி ஜில்லா, மருதை ஆறு திட்டம் எடுத்துக் கொள்ளப்பட்டதா ?

(இ) ஆமென்றால், அதை பூர்த்தி செய்ய எத்தனை ஆண்டுகள் செல்லும் ?

(உ) இல்லையென்றால், கைவிட்டதின் காரணம் என்ன ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

(*c*) This scheme has been proposed for inclusion in the Third Five-Year Plan and it is now under investigation.

*City Civil Court Judge*

* 59 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the total remuneration of the City Civil Court Judge, his pay, dearness allowance and other allowances; and

(*b*) the total remuneration of the Government Pleader in the High Court?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The scale of pay of the City Civil Court Judge is Rs. 1,100—50—1,300—1,300—60—1,600—100/2—1,800. He is not eligible for any allowances.

(*b*) The Government Pleader, High Court, Madras, is paid a monthly retainer of Rs. 300. He is also paid fees for appearance in cases according to the scale prescribed in the Standing Orders.

SRI T. S. RAMASWAMI : May I have an idea about the average monthly remuneration of the Government Pleader?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not have the figures. I do not think it will be possible to give the figures also. It depends upon the number of cases conducted.

SRI S. LAZAR : So far as the scale of pay or retainer fee for Government Pleader and Public Prosecutors in the entire State including those in mufassal, are concerned, may I know when these were fixed? Has it not been fixed before a long time? If so, will the Government consider the question of reconsidering the matter and revising the scales in consonance with the general increase in the scales of pay of others?

THE HON. SRI C. SUBRAMANIAM : This is only a retainer fee. The retainer fee is paid to the Advocate-General, Government Pleader and Public Prosecutors. The scale of fee depends

[21st January 1961

upon the number of cases done and also the nature of the cases done. Therefore I do not think there is need to revise the scale of retainer fee that is being paid now.

SRI M. KALYANASUNDARAM : இந்த வக்கீல்களுக்கு ஆபிஸ்கள் நடத்துவதற்கு என்றோ அல்லது வேறு ஏதாவது அலவன்ஸ்கள் கொடுக்கப்படுகிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not have the information

SRI N. R. THIAGARAJAN : ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்கிய அதிகாரிக்கு 300 ரூபாய் குறைந்த சம்பளமல்லவா ? ஆகவே, இவர்களது சம்பளத்தை அதிகப்படுத்த சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த சம்பளத்தைத் தவிர, கேஸ் நடத்துவதற்கு என்று வேறு தனியாக பீஸ் கொடுக்கப்படுகிறது. சில மாதங்களில் குறைவாக கிடைக்கலாம், சில மாதங்களில் அதிகமாக கிடைக்கலாம், சில மாதங்களில் ஒன்றுமே கிடைக்காமலும் போகலாம்.

SRI S. LAZAR : As the Hon. Minister pointed out the fees is fixed on the number of cases conducted by the Government Pleader or the Public Prosecutor as the case may be. Is it not a fact that the scale of fees under the Legal Practitioners' Act was passed long ago and the fees remain constant without undergoing any change in spite of the various changes in other fields of activities?

THE HON. SRI C. SUBRAMANIAM : This would also affect the scale of fees to be paid by other litigants. I do not think there is case for revising the scale of fees generally as the fees to be paid would vary in respect of litigation.

*Nylon fabrics*

* 60 *Q*.—SRI A. A. RASHEED :
SRI S. M. ANNAMALAI : } Will the Hon. the Minister for Revenue be pleased to state whether the Government hospitals in the Madras City have reported any cases of skin disease due to the use of nylon-fabrics, plastic materials and lip-sticks?

THE HON. SRI M. A. MANICKAVELU : Only one case of contact dermatits due to nylon socks was treated in the Government Stanley Hospital, Madras, during 1959.

SRI A. A. RASHEED : May I know, Sir, whether the attention of the Government had been drawn to the statement made by the Union Minister for Health that skin diseases are caused by using plastic materials. and if so, may I know whether research nas been conducted into that?

21st January 1961]

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I remember what he said was that children using plastic covers die in certain cases because when they put the mask and cover their faces with it, they get struck up and die of suffocation.

I have not heard anything about this.

SRI S. M. ANNAMALAI : *ஸார், இந்த நைலான் சேலைகளை உடுத்துவது ஆபாசமாக இருக்கிறது. பிளாஸ்டிக் சாமான்களை உபயோகிப்பதால் வியாதிகள் வருகின்றன—மரணம் வரையில்கூட செல்லுகின்றது. ஆகையால் இவைகளை உபயோகிப்பதைத் தடுக்க ஏன் சர்க்கார் நடவடிக்கை எடுக்கக்கூடாது?*

THE HON. SRI M. A. MANICKAVELU : *அப்படிச் செய்தால் பெண்கள் உலகம் படையெடுத்து வரும். (சிரிப்பு).*

SRI K. VINAYAKAM : Sir, may I know in all seriousness whether it is possible to communicate the skin diseases by the use of lip-sticks?

MR. SPEAKER : A separate question may be put.

*Coastal road from Madras to Ennore*

* 61 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) whether there is any proposal to construct a coastal Highway from Madras to Ennore; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI P. KAKKAN : (*a*) & (*b*) Yes, Sir. It is proposed to construct a road of National Highway standard from Madras Harbour to Ennore along the sea-coast during 1961–62 as part of the Third Five-Year Plan. Necessary estimates are being prepared.

SRI A. A. RASHEED : Sir, what is the proposed length of this coastal highways and may I know the cost also that is going to be involved?

THE HON. SRI P. KAKKAN : We are taking necessary steps to form the road. At this stage I cannot give the length of the road.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Some time past I saw in the newspapers that the Union Minister for Communications said that it was unlikely to take up any coastal road during the Third Plan period. May I know whether the coastal road is going to be formed or not?

THE HON. SRI P. KAKKAN : We had a conference with the Minister of Industries. We have come to a decision that the road must be formed in the interests of industries in that area.

[21st January 1961

*Montessory method*

* 62 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம்ஷ ஆகஸ்ட்மீ 8-ந் தேதி 12-ம் எண். கேள்விக்கு அளித்த பதிலை ஒட்டி, மாண்டிசோரி கல்வி முறையில் பயிற்சிபெறும் ஆசிரியர்களுக்குப் பொதுக் கல்வியில் என்ன தகுதி பெற்றிருக்க வேண்டும் ?

(இ) எத்தனை ஆண்டுகள் பயிற்சி பெற வேண்டும் ?

(உ) மாண்டிசோரி முறையில் பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் இதர பள்ளிகளில் பணியாற்ற அனுமதிக்கப்படுவார்களா ?

(எ) அப்படியானால், எந்தெந்த வகுப்புகளுக்கு அவர்கள் போதிக்கலாம் ?

(ஐ) மாண்டிசோரி முறைப் பள்ளிகளில் மாணவர்கள் எத்தனை வயதிலிருந்து சேர்க்கப்படுகின்றனர் ?

(ஒ) அவர்களுக்கு எத்தனை ஆண்டுகள், அங்கு எத்தனை வகுப்பு வரை போதிக்கப்படுகிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) to (*f*) A statement[a] is laid on the table of the House.

SRI A. VEDARATHNAM : இந்த மாண்டிசோரி முறை ஆசிரியர் பயிற்சி எங்கே நடைபெறுகின்றது ? யார் நடத்துகின்றார்கள் ? இதற்கு அரசாங்கம் அளித்து வருகின்ற உதவி என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : I don't have the information. The hon. Member may put a separate question.

SRI A. VEDARATHNAM : இது வரையில் நம் மாநிலத்தில் இந்த மாண்டிசோரி முறையில் நடைபெற்று வருகின்ற பள்ளிகளிலிருந்து பயிற்சி பெற்று வருகின்ற மாணவர்களுக்கும், அதே மாதிரி பூர்வாதார வகுப்பிலிருந்து வருகின்ற மாணவர்களுக்கும் வித்தியாசம் ஏதாவது கண்டுபிடிக்கப்பட்டுள்ளதா ? இதில் எந்த முறை சிறந்தது என்று அறிந்து அதற்கு ஆக்கம் அளிக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இரண்டுக்கும் தாரதம்யம் ஒன்றும் இதுவரையில் பார்க்கவில்லை. ஒவ்வொன்றிலும் சில நல்ல அம்சங்கள் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

SRI S. PAKKIRISAMI PILLAI : மாண்டிசோரி டிரெயினிங் ஆன உபாத்தியாயர்களுக்கு சாதாரணமாக வேலை கிடைப்பதில்லையே அதன் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மாண்டிசோரி ஸ்கூல்கள் இல்லாததால்தான்.

---

[a] Printed as Appendix IV on page 237 intra.

21st January 1961]

*College text-books in Tamil.*

* 63 *Q.*—SRI A. VEDARATHNAM
SRI T. S. RAMASWAMY : } கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கிழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கல்லூரியில் தமிழ் போதனமொழியாக வேண்டிய பாடபுத்தகங்கள் தயாராகிவிட்டனவா ?

(இ) என்னென்ன புத்தகங்கள் இதுவரை வெளி வந்திருக்கின்றன ?

(உ) இன்னும் எந்தெந்த பாடங்களுக்கு தமிழில் பாடப் புத்தகங்கள் தயாராக வேண்டியது பாக்கி இருக்கிறது ?

(எ) அவைகளை தயார் செய்ய என்ன முயற்சி எடுக்கப் பட்டிருக்கின்றது ?

(ஐ) அவை எப்போது தயாராகும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ, இ, உ, எ, ஐ) இது சம்பந்தமான ஒரு விவர அறிக்கை [a] அங்கத்தினர்கள் முன் வைக்கப்பட்டிருக்கிறது.

தேவையான வேலைகள் தொடர்ந்து நடைபெறுகின்றன.

SRI A. VEDARATHNAM : அரசாங்கத்தைத் தவிர இந்தக் கல்லூரிக்கு தமிழ் மூலம் பாட போதனை நடத்துவதற்குப் புத்தகம் எழுத வேறு எழுத்தாளர்கள் முன் வந்தால் அவர்களுக்கு அரசாங்கம் ஆக்கம் அளிக்குமா ? அப்படி யாரேனும் முன் வந்திருக்கிறார்களா ? அல்லது வேறு ஏதாவது கல்லூரி இந்தப் பணியில் ஈடுபட்டிருக்கின்றதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது கோயம்புத்தூர் கல்லூரியில்தான் தமிழில் பாடம் சொல்லிக்கொடுத்து வருகின்றது. வேறு யார் முன் வந்து புத்தகங்கள் எழுதினாலும் தகுந்த சன்மானம் கொடுத்து அவைகளை வெளியிட அரசாங்கம் முன் வரும்.

SRI A. A. RASHEED : May I know, Sir, whether any original text-books in History, Politics or Pshychology are written apart from translation?

THE HON. SRI C. SUBRAMANIAM : They are not mere translations but they are original text-books.

SRI A. VEDARATHNAM : அண்ணாமலை பல்கலைக் கழகம் தமிழில் பல நூல்கள் எழுதி வெளியிட்டிருக்கின்றதே அவைகளை அரசாங்கம் பயன்படுத்தி வருகின்றதா ? இல்லையானால் பயன்படுத்த முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதிலும் தகுந்த புத்தகங்கள் இருந்தால் கட்டாயம் பயன்படுத்தத்தான் செய்வோம்.

[a] Printed as Appendix V on pages 238–244 infra.

[21st January 1961

*Explosives to break rocks*

*** 64 Q.—SRI V. K. KOTHANDARAMAN :** கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்தில் கிணறுகளில் பாறையை உடைக்கும் வெடி மருந்து விற்பனை லைசென்ஸ்கள் வழங்கப்பட்டுள்ளனவா ?

(இ) எத்தனை பேர்களுக்கு வழங்கப்பட்டிருக்கின்றன ?

(உ) இல்லை என்றால், இனிமேலாவது வழங்கும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes;

(*b*)—

| *Serial number.* | *Year.* | *Number of licences granted.* |
|---|---|---|
| 1 | 1958 | 192 |
| 2 | 1959 | 131 |
| 3 | 1960 (up to 1—9—1960) | 168 |

(*c*) does not arise.

**SRI V. K. KOTHANDARAMAN :** ஸார், நமது ராஜ்யத்திலே பல மாவட்டங்களிலே பத்தாயிரக்கணக்கான ரூபாய் செலவு செய்து கிணறு வெட்டும்போது பாரைகள் வரக் கூடிய நேரத்தில் சட்ட ரீதியாக வெடி மருந்து வாங்கி வெடி வைத்துப் பெயர்ப்ப தற்கு சென்னையிலுள்ள கலெக்டருக்கும், டி.எஸ்.பி-க்கும் எழுதி அனுமதி வாங்கி பக்கத்தில் இருக்கும் மைசூரில் போய் வெடி மருந்து வாங்க வேண்டிய நிர்ப்பந்தம் இருந்து வருகின்றது. இதைத் தவிர்க்க ஒவ்வொரு தாலூகாவிலும் வெடி மருந்து கிடைப் பதற்கு வெடி மருந்து விற்பனை செய்ய உடனடியாக லைஸென்ஸ் வழங்க அரசாங்கம் முன் வருமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** ஆண்டுதோறும் எவ்வளவு லைஸென்ஸ் வழங்கப்பட்டது என்று சொன்னேன் அதிகமாக, பரிசீலனை செய்யாமல் வழங்குவது நல்லதல்ல. அது ஆபத்திற்குரியது என்பதும் கனம் அங்கத்தினர்களுக்குத் தெரியும்.

**SRI V. K. KOTHANDARAMAN :** ஸார் . . . . .

MR. SPEAKER : The Hon. Member has already taken up the time required for three questions.

21st January 1961]

*Block Advisory Committees*

* 65 *Q*.—**Sri P. G. MANICKAM :** கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் வருடத்தில் நிறுவப்படும் வட்டார வளர்ச்சி அட்வைசரி கமிட்டிகளில் ( Block Development Advisory Committee) சட்டசபை அங்கத்தினர்கள் எக்ஸ்-அபிசியோ ( ex-officio) அங்கத்தினர்களாக நியமிக்கப்படாததிற்கு காரணமென்ன ?

(இ) 1960-ம் வருடத்தில் எத்தனை வட்டார வளர்ச்சி அட்வைசரி கமிட்டிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) When orders were issued in G.O. Ms. No. 281, Rural Development, dated 27th November 1959 for the constitution of Block Advisory Committees on an *ad hoc* basis inadvertently the position regarding Members of the Legislative Assembly in the Committees to be constituted with effect from 1st January 1960 was not fully clarified. The unfortunate omission has since been rectified. Orders have also been issued appointing Members of the Legislative Assembly as ex-officio members of the Block Advisory Committees in their constituencies.

(*b*) The information is not readily available. It will be collected and placed on the table of the House, in due course.

* 66 *Q*.—Sri K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the local Member of the Legislature is a Member of the Block Advisory Committee; and

(*b*) if not, the reasons therefor?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) Does not arise.

**Sri K. SATTANATHA KARAYALAR :** ஸார், 1960-ம் வருஷம் ஜனவரி மாதம் 1-ந் தேதிக்கு முன்புள்ள பிளாக் அட்வைஸரி கமிட்டியிலும் தொகுதி எம்.எல்.ஏ. விடப்பட்டிருக்கிறதே, அதன் காரணம் என்ன ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இப்போது அந்தக் குறைகளை நிவர்த்தி செய்து உத்திரவு அனுப்பப்பட்டிருக்கின்றது. இப்போது எந்த விதமான சங்கடமும் இருப்பதாகத் தெரியவில்லை.

**Sri T. S. RAMASWAMI :** செங்கோட்டை பிளாக்கில் கனம் அங்கத்தினர் அங்கத்தினராக இல்லை. அதன் காரணம் என்ன ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** புதிதாக மறுபடியும் உத்திரவு அனுப்பப்பட்டிருக்கின்றது. அந்த உத்திரவு பிரகாரம் எல்லா அசெம்ப்ளி மெம்பர்களும் மெம்பராக இருப்பதற்கு இடம் இருக்கின்றது. இனிமேல் இந்தக் குறை ஏற்பட இடமில்லை.

[21st January 1961

*Memorial to V.O. Chidambaram*

MR. SPEAKER : As the hon. Member who gave notice of Question No. 67 is not in his seat, the question and answer will be printed in the proceedings[a].

*Anicut across Sendurai odai*

* 68 *Q.*—SRI S. RAMALINGA PADAYACHI : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்வி களுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருச்சி ஜில்லா உடையார்பாளையம் தாலுகா குருமூர் கிராம ஏரிக்குத் தண்ணீர் கொடுக்க செந்துறை ஓடையில் மொட்டணை கட்டும் உத்தேசம் உண்டா ?

(இ) அப்படியானல், எவ்வளவு செலவில் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir. The anicut will be across Kulumur Odai, below the confluence of Sendurai and Nakkambadi Odais.

(*b*) Rs. 79,000.

SRI S. LAZAR : May I know, Sir, whether is has been included in the Third Five-Year Plan ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is no question of being included in the Third Plan. If the scrutiny is finalised, it will be taken up presently.

*Memorial to V. O. Chidambaram—Q. No. 67 continued*

SRI K. VINAYAKAM : Sir, I would request the Chair to go back to Question No. 67 as it is of paramount importance to the House.

MR. SPEAKER : The hon. Member is not alert. If, however, the House desires to allow the question to be put and answered, I have no objection.

SRI N. R. THIAGARAJAN : ஸார், 67-வது கேள்வி சிதம்பரனார் சம்பந்தமானது.

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் முன்னெச்சரிக்கையாக இருந்திருக்க வேண்டும்.

SRI N. R. THIAGARAJAN : ஸார், தயவு செய்து இக் கேள்வியை எடுத்துக் கொள்ளுங்கள்.

MR. SPEAKER : சரி, யார் இந்தக் கேள்வியைக் கேட்கப் போகிறார்கள் ?

* 67 *Q.*—SRI N. R. THIAGARAJAN (on behalf of Sri K. R. NALLASIVAM) : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

கோவை மத்திய சிறையில் செக்கிழுத்த சிதம்பரனாருக்கு ஞாபகச் சின்னம் எழுப்பும் உத்தேசம் உண்டா ?

[a] Answered subsequently.

21st January 1961]

**THE HON. SRI C. SUBRAMANIAM:** வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்களுக்குக் கோவை சிறையில் நினைவுச் சின்னம் நிறுவும் யோசனை இல்லை. அவர்கள் பிறப்பிடமாகிய ஓட்டப்பிடாரத்தில் நினைவுச் சின்னம் ஒன்று அமைக்கப்பட்டு வருகிறது.

*S.S.L.C. Examination*

* 69 *Q.*—SRI T. S. RAMASWAMY: Will the Hon. the Minister for Finance be pleased to state the nature of encouragement given by the Government to the High Schools which produced cent per cent results in the S.S.L.C. Examination for the past two years?

THE HON. SRI C. SUBRAMANIAN: None of the High schools in this State produced cent per cent results in the S.S.L.C. Public Examinations held during the last two years. The schools that produced 75 per cent and more of passes were commended.

**SRI A. VEDARATHNAM:** நூற்றுக்கு நூறு மாணவர்கள் எஸ்.எஸ்.எல்.ஸி. பரிட்சையில் தேறிய பள்ளிகளுக்கு அரசாங்கம் என்ன ஊக்கம் கொடுக்க முன்வரும்? இதுவரை என்ன செய்திருக்கிறார்கள்?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** பாராட்டுதல் தெரிவிக்கப் படுகின்றன.

**SRI V. K. KOTHANDARAMAN:** ஸார், எஸ்.எஸ்.எல்.ஸி. பரிட்சையில் நூற்றுக்கு நூறு மாணவர்கள் தேறும் அல்லது அதைவிட 5, 10, 20 சதவிகிதம் குறைந்து தேறும் உயர்நிலைப் பள்ளிகளை மட்டும் தூண்டுவிக்கப்படுகிறதா? அல்லது ரொம்ப குறைந்த பாஸ் செய்யும் உயர்நிலைப் பள்ளிகளையும் தூண்டுவிக்கப் படுகிறதா? என்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM:** இரண்டையும் தூண்டு விக்கப்படுவது உண்டு. ரொம்ப குறைவாக தேறும் பள்ளிகளை இன்னும் நன்றாக போதிக்க வேண்டுமென்று தூண்டுவிக்கப்படு கிறது. அதே மாதிரி நிறைய மாணவர்கள் தேறும் பள்ளிகளுக்கு பாராட்டுதல் தெரிவிக்கப்படுகின்றது.

SRI A. A. RASHEED: Is it a fact that there was a large percentage of failures in the recent S.S.L.C. Examination and if so, may I know the reasons for failures?

(No answer)

**SRI A. VEDARATHNAM:** நன்றாக நடத்தப்படுகின்ற பள்ளி களுக்குப் பரிசுத் திட்டம் வைத்திருக்கிறார்கள். அதேபோல் நூற்றுக்கு நூறு மாணவர்கள் தேறுகின்ற பள்ளிகளுக்கு இந்தப் பரிசுகள் வழங்கப்படுமா?

[21st January 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : எந்தப் பரிசைக் குறிப் பிடுகின்றூர்கள் என்று எனக்குத் தெரியவில்லை. ஆனல், அப்படி நூற்றுக்கு நூறு தேறும் பள்ளிகளுக்குப் பரிசு கொடுக்கும் திட்டம் இருந்தால், அவர்களுக்கு அந்தப் பரிசு கொடுக்கப்படும்.

*Cases of dog bite*

* 70 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether there is any increase in the number of cases of dog bite reported in Government Hospitals in the Madras City; and

(*b*) if so, the steps taken to remove stray dogs in the City?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir. The number of dog bite cases treated in the City State Hospitals (except the specialist institutions) has increased during the current year as compared to the previous years.

(*b*) Intensive action has been and are being taken by the Corporation of Madras to abate the nuisance of stray and unlicensed dogs by arranging for frequent raids by dog vans in all parts of the City to round up and remove such dogs to the Corporation Lethal Chamber at Basin Bridge for destruction.

SRI A.A. RASHEED : Is the Hon. Minister aware that stray dogs will continue to roam in big numbers in the Madras City and if so, will the Government come forward to aid the Corporation for the purchase of additional vans to catch these stray dogs?

THE HON. SRI M. A. MANICKAVELU : It is primarily the responsibility of the Corporation of Madras and now they have increased their activities. Probably, as has been stated with regard to a question about schools just a few minutes ago, a little more 'thoonduthal' will be done here also.

SRI S. NAGARAJA MONIGAR : இந்த நாய்க் கடிகளெல்லாம் லைசென்ஸ் பெருமல் தெருவிலே திரிகின்ற நாய்களால் ஏற்படுகின் றனவா ? அல்லது லைசென்ஸ் பெற்று சொந்தக்காரர்களால் வளர்க்கப்படுகின்ற வீட்டு நாய்களால் ஏற்படுகின்றனவா ? அப்படியாளுல் அதற்கான கணக்குகள் உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : வீட்டிலே உள்ள நாய்கள் கட்டிப்போட்டு இருப்பதால் அவைகள் கடிக்காது. தெருவிலே உள்ள நாய்கள்தான் கடிக்கும்.

*Cement*

* 71 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Works be pleased to state whether the Government of India have made any suggestion to this Government for abolishing the Cement Licensing System?

21st January 1961]

THE HON. SRI P. KAKKAN : Yes, Sir. The Government of India requested this Government to consider the question of doing away with the system of licensing of Cement Stockists.

The question has been examined by this Government and they have decided that the present system of licensing of cement stockists should continue.

SRI A. A. RASHEED : Since the Government of India have recommended and also in view of the larger production of cement in our State; will the Government be pleased to abolish this licensing system?

THE HON. SRI P. KAKKAN : Not now.

*Elementary Schools*

*** 72 Q.—SRI A. VEDARATHNAM :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லாவில் இந்தக் கல்வி ஆண்டில் எத்தனை ஆரம்பப் பள்ளிகள் உயர் ஆரம்பப் பள்ளிகளாக உயர்த்தப்பட்டிருக்கின்றன—தாலுகா வாரியாக ?

(இ) தஞ்சை ஜில்லாவில் எத்தனை ஆரம்பப் பள்ளிகளை உயர் ஆரம்பப் பள்ளிகளாக மாற்றவேண்டுமென வந்த விண்ணப்பங்கள் நிறைவேற்றப்படாமலிருக்கின்றன—தாலுகா வாரியாக ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) A statement [a] is laid on the table of the House.

**SRI A. VEDARATHNAM :** மேஜை மீது வைத்திருக்கும் பேபரில் மொத்தம் 77 பள்ளிகள் விண்ணப்பித்திருந்ததாகவும், அவற்றில் 35 பள்ளிகளின் விண்ணப்பங்கள் நிராகரிக்கப்பட்டுள்ள தாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த நிராகரிக்கப்பட்ட விண்ணப்பங்கள் எல்லாம் எந்த காரணத்திற்காக, எந்த கொள்கையின் அடிப்படையில் நிராகரிக்கப்பட்டன என்பதை அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** பக்கத்திலே போதுமான பள்ளிக்கூடங்கள் இருந்தால் அப்போது புதிய உயர்நிலைப் பள்ளிகளுக்கு அனுமதி மறுக்கப்படும். அல்லது போதுமான இடவசதி இல்லாவிட்டாலும் அனுமதி மறுக்கப்படும். இந்த மாதிரியான அடிப்படைகளை வைத்துக் கொண்டுதான் விண்ணப்பங்கள் நிராகரிக்கப்படுகின்றன.

**SRI A. VEDARATHNAM :** ஒரே ஊரில் தனியார் நடத்தும் பள்ளியும், போர்டு பள்ளியும் அங்கீகாரம் வேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டால், எதற்கு அரசாங்கம் அனுமதி கொடுக்கும் ? எதை நிராகரிக்கும் ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** எந்தப் பள்ளிக்கூடம் நன்றாக நடக்கிறதோ அதற்கு அனுமதி கொடுக்கப்படும்.

---

a Printed as Appendix VI on page 245 infra.

[21st January 1961

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : பக்கத்திலே ஒரு உயர்தர பள்ளிக்கூடம் இருந்தும், சில இடங்களில் அனுமதி கொடுக்கப்பட்டு இருக்கிறது. இது அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்த மாதிரி இருக்கக் கூடிய கேஸ்களைக் குறித்துக் கொடுத்தால், கேட்பதற்கு வசதியாக இருக்கும்.

SRI A. VEDARATHNAM : திருத்துறைப்பூண்டி தாலுகாவில் 10 பள்ளிக்கூடங்கள் அப்-கிரேட் செய்வதற்காக விண்ணப்பித்திருந்தும், 10 விண்ணப்பங்களும் நிராகரிக்கப்பட்டிருக்கின்றன. அது எந்த காரணத்தினால் நிராகரிக்கப்பட்டது என்று கூற முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நான் சொன்ன காரணத்தினால்தான். நாகப்பட்டிணத்தில் 5 பள்ளிகளுக்கு 5 பள்ளிகள் அங்கீகரிக்கப்பட்டிருப்பதை கனம் அங்கத்தினர் கவனிக்க வேண்டும். ஆகவே, ஆங்காங்கே இருக்கக்கூடிய அத்தியாவசியத்தை அனுசரித்தே, போதுமான பள்ளிக்கூடங்களுக்கு அனுமதிகள் வழங்கப்படுகின்றன.

*Teachers Training Colleges*

* 73 *Q*.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-61-ல் இம்மாநிலத்திலுள்ள பி.டி. ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி ஒவ்வொன்றிலும் எத்தனை பயிற்சியாளர்களுக்கு இடமிருக்கின்றது ?

(இ) அவை ஒவ்வொன்றிலும் இந்தக் கல்வி ஆண்டில் எத்தனை பயிற்சியாளர்கள் (விஞ்ஞானம், கணிதம், சமூகம் போன்ற சப்ஜக்ட் வாரியாக) சேர்ந்திருக்கிறார்கள் ?

(உ) இம்மாநிலத்திலுள்ள பட்டதாரி ஆசிரியர் பற்றாக் குறையைப் போக்க இந்த எண்ணிக்கை போதுமானதா ?

(எ) இல்லையானால் இந்தப் பற்றாக்குறையைப் போக்க என்ன முயற்சி எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) A statement [a] is laid the table of the House.

(*c*) Yes, Sir.

(*d*) Does not arise.

SRI A. VEDARATHNAM : இப்போது இந்த ஆண்டு அனுபவத்திலிருந்து நம்முடைய மாகாணத்திற்குப் போதுமான பட்டதாரி ஆசிரியர்களை இப்போதுள்ள கல்லூரிகளிலேயே தயார் செய்து விட முடியுமென்ற நம்பிக்கை அரசாங்கத்திற்கு இருக்கிறதா ? அப்படி இல்லையானால், இன்னும் பட்டதாரி ஆசிரியர் பயிற்சிக்கான கல்லூரிகள் தேவைப்படுமா ? அப்படித் தேவைப்பட்டால், அப்படிப்பட்ட கல்லூரிகளில் எண்ணிக்கையை அதிகரிப்பதற்கான யோசனை அரசாங்கத்திடம் உள்ளதா ?

---

[a] Printed as Appendix VII on page 246 infra.

21st January 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : சென்ற ஆண்டுவரையிலும் இப்போது இருக்கக்கூடிய கல்லூரிகளிலேயே போதுமான அளவு மாணவர்கள் வந்து சேரவில்லை. ஆனால், இந்த ஆண்டு கொஞ்சம் நிலைமை சீரடைந்து உள்ளது. ஆண்களுக்கு இருக்கக்கூடிய இடம் 965. ஆனால் 942 பேர்கள் தான் சேர்ந்திருக்கிறார்கள். இருபத்திமூன்று இடம் பாக்கியிருக்கிறது. அதுபோல் பெண்களுக்கு இருக்கக்கூடிய இடம் 400. அதில் 376 பேர்கள் தான் சேர்ந்திருக்கிறார்கள். இன்னும் 24 இடம் பாக்கியிருக்கிறது. இப்போது சம்பள உயர்வு கொஞ்சம் அதிகம் கொடுத்திருக்கின்ற காரணத்தினாலே, இந்த ஆண்டு அதிகம் பேர்கள் சேர்ந்திருக்கிறார்கள். இப்போது இருக்கக்கூடிய எல்லா இடங்களுக்கும், வருஷா வருஷம் சேர்ந்து விடுவார்களேயானால், நிலைமை சீரடைந்து விடுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

*Kattalai Pullambadi canals*

* 74 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கட்டளை, புள்ளம்பாடி கால்வாய்கள் கட்டும் வேலை முடிந்து விட்டதா?

(இ) இதுவரை அவ்வேலையில் அமர்த்தியிருந்த வேலையாள்களை மற்றத் திட்டங்களிலும் அமர்த்தும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI P. KAKKAN : (a) The work is nearing completion.

(b) The workers employed by the contractors have been taken away by them to other projects under execution or disbanded, if not required. Action is being taken to absorb the maistries and operators employed departmentally in other projects to the extent feasible.

*University (Coimbatore)*

* 75 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to start a University in the Coimbatore district?

THE HON. SRI C. SUBRAMANIAM : No final decision has been taken regarding the starting of new Universities.

SRI N. K. PALANISAMI : கோயம்புத்தூரிலே, 2, 3 என்ஜினீயரிங் கல்லூரிகளும், கலாசாலைகளும், இன்னும் மருத்துவ கல்லூரி ஏற்படுவதற்கான வாய்ப்புகள் இருக்கின்ற காரணத்தினாலே, அங்கே பல்கலைக் கழகம் ஒன்றைத் துவங்க சர்க்கார் முன்வருவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போதே கனம் அங்கத்தினர் சங்கரன் அவர்கள் தன் கையைத் தூக்கிக் கொண்டு நிற்கிறார்கள். இதிலே இனி போட்டி இருக்க வேண்டிய அவசியம் இல்லை. ஒரு சர்வகலாசாலை ஏற்படுத்துவது என்றால், யூனிவர்சிடி

கிராண்ட்ஸ் கமிஷனைக் கலந்து, எங்கெங்கே அவசியமோ அங்கெல்லாம் ஏற்படுத்துவது என்ற அடிப்படையை வைத்துக் கொண்டு, அந்தந்த இடங்களில் போதிய சர்வகலாசாலைகளை அமைக்க வேண்டுமென்று சர்க்கார் முயற்சி செய்யும்.

**SRI V. SANKARAN:** ஏற்கனவே பல வருஷங்களாக கேட்டுக் கொண்டு வருகிற ஒரு மாவட்டத்தினுடைய கோரிக்கையையும், அதோடு ஏற்கனவே சில அமைச்சர்கள் பல இடங்களில் சூசகமாகவும், வெளிப்படையாகவும் மதுரையில் ஒரு சர்வகலாசாலை ஆரம்பிக்கப்பட இருக்கிறது என்று சொல்லிய பேச்சுக்களையும் கௌரவிக்க மதுரையில் சர்வகலாசாலை அமைப்பதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** இது சர்வகலாசாலை அமைக்கக்கூடிய விஷயம். மந்திரிகளுடைய கருத்தை மட்டும் அடிப்படையாகக் கொண்டு இது அமைப்பது அல்ல. இது சர்வகலாசாலையின் சிபார்சையும் பொறுத்திருக்கிறது. நான் முன்பு சொன்னது போல யூனிவர்ஸிடி கிராண்ட்ஸ் கமிஷன் சிபார்சையும் பொறுத்திருக்கிறது. இதையெல்லாம் வைத்துக்கொண்டு முடிவு எடுக்கவேண்டியதாக இருக்கிறது. ஆகையினாலே அநேக ஆண்டுகளாக கேட்டுக்கொண்டு வருகிறோம் என்ற அடிப்படையில் முடிவு செய்ய முடியாது. மந்திரிகள் விரும்புகிறார்கள் என்ற அடிப்படையிலும் முடிவு செய்ய முடியாது.

**SRI N. R. THIAGARAJAN:** ஏற்கனவே முதற்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்ற மூன்று சங்கங்கள் மதுரையில் இருந்திருக்கின்றன. இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழும் மதுரையில் தோன்றியது. இதையெல்லாம் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு சங்கம் வளர்த்த மதுரையில் சர்வகலாசாலை ஏற்படுத்த சர்க்கார் முயற்சி செய்வார்களா?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** இதை அடிக்கடி வலியுறுத்தவேண்டாம் என்று ஸ்ரீ என். ஆர். தியாகராஜன் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன், மதுரையில் அக்கரை இருந்தால். ஏனென்றால் மதுரையில் மூன்று சங்கங்கள் இருந்து அழிந்து விட்டன, மறுபடியும் அங்கு ஒரு சர்வகலாசாலை ஏற்பட்டு அழிந்து விடக்கூடாது என்று மக்கள் நினைத்துவிடக்கூடாது. (சிரிப்பு).

**SRI S. LAZAR:** மாவட்டங்களிலே அதிகப்படியான கல்லூரிகள் இருக்கிற காரணத்தினால் அங்கே யுனிவர்ஸிடி வேண்டும் என்ற கோரிக்கை அதிகமாக வந்துகொண்டிருக்கிறது. ஆகையால், மேலும் ஏற்படுத்தக்கூடிய கல்லூரிகளை கல்லூரிகள் இல்லாத மாவட்டங்களில் அமைப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** அதுமாதிரி தான் இப்பொழுது கல்லூரிகள் அமைத்துக்கொண்டு வரப்படுகிறது. ஆனால் இப்பொழுது சாதாரணமாக பட்டப் படிப்பு கல்லூரிகள்

21st January 1961]

இருக்கக்கூடிய இடங்களில் இன்னும் போதுமான மாணவர்கள் சேரவில்லை. ஆகையினால் அங்கெல்லாம் புதியதாக கல்லூரிகள் ஏற்படுத்துவது என்பது பற்றி கொஞ்சம் நிதானமாக யோசித்துத் தான் முடிவு செய்யப்படுகிறது.

SRI V. SANKARAN : ஏற்கனவே உள்ள சென்னை சர்வகலா சாலை தன்னைப்போன்று இன்னொரு சர்வகலாசாலை இந்த ராஜ்யத்தில் சில மாவட்டங்களைக் கொண்டு வைத்தால் தன்னுடைய ஆதிக்கம் ஓரளவு குறைந்துவிடும் என்ற காரணத்தை வைத்து அதற்கு மாறாக அபிப்பிராயம் கொடுத்தால், அதையெல்லாம் மனதில் கொண்டு பரிசீலிப்பதற்கு சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : செனட்டில் இருக்கக் கூடியவர்கள் சென்னையிலும், சென்னைக்கு பக்கத்திலும் மட்டும் இருக்கக்கூடியவர்கள் அல்ல. நமது ராஜ்யம் முழுவதிலும் எல்லாப் பகுதிகளிலும் இருந்து வந்திருக்கக்கூடியவர்கள் செனட்டில் இருக்கிறார்கள். எல்லாப் பகுதிகளின் அவசியத்தையும் மனதில் வைத்து அவர்கள் முடிவு செய்வார்கள் என்று நான் நம்புகிறேன். அதிலும் சர்வகலாசாலையில் இருக்கக்கூடிய அறிஞர்கள் இதுபோன்று போட்டி வந்துவிடும் என்ற அடிப்படையில் நினைக்க மாட்டார்கள் என்று நான் கருதுகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : அரசாங்கம் இன்னொரு சர்வகலாசாலை தொடங்குவது பற்றி சென்னை சர்வகலாசாலைக்கும், யுனிவர்ஸிடி கிராண்ட்ஸ் கமிஷனுக்கும் என்ன யோசனைகள் அனுப்பியிருக்கிறார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மதுரையில் இன்னொரு சர்வகலாசாலை ஏற்படுத்தலாமா, அதுபற்றி கருத்து என்ன என்று யுனிவர்ஸிடியைக் கேட்டிருக்கிறோம்.

*Nakkambadi Village Lake*

*76 Q.—SRI T. R. RAMAMIRTHA THONDAMAN (on behalf of SRI S. RAMALINGA PADAYACHI) : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருச்சி ஜில்லா உடையார்பாளையம் தாலுகா நக்கம்பாடி கிராம ஏரியை விஸ்தரிக்கும் உத்தேசம் உண்டா ?

(இ) அப்படியாயின், அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப் பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Yes, Sir.

(b) The matter is under consideration of the Chief Engineer (Irrigation).

[21st January 1961

*Advocate-General*

* 77 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the attention of the Government has been drawn to a resolution passed by the Madras Advocates' Association expressing want of confidence in the Advocate-General; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) No action is called for by the Government on this resolution.

* 78 *Q.*—SRI A. A. RASHEED :
SRI T. S. RAMASWAMY : } Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Advocate-General has offered to resign his post;

(*b*) whether his resignation has been accepted; and

(*c*) if not, why?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes.

(*b*) No.

(*c*) Government was of the view that the resignation was not warranted.

SRI A. A. RASHEED : Is it not essential that the Advocate-General should carry with him the goodwill and confidence of the Bar as well as the Advocates' Association?

THE HON. SRI C. SUBRAMANIAM : I think the Advocate-General was the Advocate-General for the Government. The Government should have confidence in his capacity and ability to conduct cases and to advise the Government. The other matters do not arise at all as far as Government are concerned.

**SRI N. R. THIAGARAJAN :** சென்னையில் உள்ள வழக்கறிஞர் மன்றத்தில் அட்வகேட் ஜெனரல் நியமனம் பற்றி சம்பந்தம் இல்லாத தீர்மானங்களைப் போடுகிறவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படுமா ?

* * * * *

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இப்படி தீர்மானம் போடுவதற்கு அவர்கள் அதிகாரம் இருந்து தீர்மானம் போட வேண்டும் என்று அவசியம் கிடையாது. சட்ட சபையில் அது மாதிரி தீர்மானம் வந்தால் அது சட்டத்திற்கு உள்பட்டதா என்பது பற்றி கனம் ஸ்பீக்கர் அவர்கள் ஆலோசனை செய்து சட்டத்திற்கு உள்படாத தீர்மானத்தை நிராகரித்து விடுகிறார்கள். அதுமாதிரி சங்கங்கள் தீர்மானங்கள் போடுவதற்கு நாம் எந்த விதமான விதியும் செய்ய முடியாது.

---

* Expunged as ordered by the chair.

21st January 1961]

**MR. SPEAKER :** கனம் அங்கத்தினர்கள் சட்ட சபையில் பேசும்பொழுது மரியாதையான, நாணயமான வார்த்தைகளை உபயோகப்படுத்த வேண்டும். மற்றவர்களுக்கு கோபம் வரும்படி யான வார்த்தைகளை உபயோகப்படுத்தக்கூடாது.

SRI K. VINAYAKAM : Are the Government aware of the fact that the concerned Madras Advocates' Association is fast contemplating to rescind that resolution and to pass a resolution expressing their confidence in the Advocate-General?

THE HON. SRI C. SUBRAMANIAM : Anyhow I am not interested in the matter. It is for the Advocates' Association either to pass the resolution or rescind the resolution. Government are not interested in that matter.

SRI T. S. RAMASWAMY : May I know whether Government are aware of the reasons behind the no-confidence resolution passed by the Bar Association? May I know whether it has been communicated to Government and if so, when?

THE HON. SRI C. SUBRAMANIAM : I thought the hon. Member would have read the resolution when he put the question. The resolution passed should contain the reasons.

*Publication of Text-books*

*** 79 Q.—SRI A. VEDARATHNAM :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

*(அ) 1960-ம் ஆகஸ்ட்டு மாதம் 16 தேதியில் 201-வது எண் கேள்விக்களித்த பதிலையொட்டி இ.எஸ்.எல்.சி. வகுப்பு களுக்குப் பாடப் புத்தகங்கள் அரசாங்கம் வெளியிடுகின்றதா? அப்படியானல் என்ன என்ன புத்தகங்கள் ?*

*(இ) இவை காலதாமதமாய் வெளிவருவதால் இதைத் தவிர்க்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக் கிறது ?*

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir. Two books are published by Government for E.S.L.C., viz., English Text Book and Tamil Text Book.

(*b*) There has been no delay in the publication of these books.

**SRI A. VEDARATHNAM :** அரசாங்கம் வெளியிடுகிற அந்த புத்தகங்கள் உரிய காலத்தில் அச்சிடப்பட்டும், தேவையான அளவு அச்சிடப்படாத காரணத்தினுல், வெகு விரைவிலே அவைகள் தீர்ந்துபோய், பின்னல் வருகிற பள்ளிகளுக்கு புத்தகங்கள் கிடைக்காத நிலை எற்படுகிறது. எனவே, தேவையை அறிந்து அதற்கு காலம் தாழ்த்தாமல் உரிய காலத்தில் புத்தகங்கள் பள்ளி களுக்கு கிடைக்கும்படிச் செய்ய அரசாங்கம் ஏதேனும் நட வடிக்கை எடுக்குமா ?

[21st January 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : இதுவரையிலும் புத்தகங்கள் கிடைக்கவில்லை என்று யாரிடத்திலிருந்தும் புகார் வரவில்லை என்று எனக்கு குறிப்பு தரப்பட்டிருக்கிறது. அத்துடன் இன்னும் அதிகமான பிரதிகள் அச்சடித்து பிரஸ்ஸில் வைத்திருக்க வேண்டும் என்று உத்தரவு போடப்பட்டிருக்கிறது. ஆகையினாலே எந்தக் காலத்திலும் புத்தகங்கள் இல்லை என்று சொல்லுவதற்கு இல்லை.

## *Compulsory National Service by Students*

* 80 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

*(அ) டெல்லியில் 1960-ம் ஆண்டு ஆகஸ்ட்டு மாதம் 19-ம் தேதியில் நடந்த கல்வி இலாகா காரியதரிசிகள் மகாநாட்டில், மெட்ரிகுலேஷனுக்குப் பிறகோ, அல்லது மேல் செகண்டரி கட்டத்திற்குப் பின்போ, மாணவர்களுக்குக் கட்டாய தேசீய சேவை திட்டத்தை அமல் நடத்துவது பற்றிய முடிவென்ன ?*

*(இ) இதில் நம் மாநிலத்தின் சார்பில் சென்றது யார் ? நம் மாநிலத்தின் சார்பாக இதுபற்றி தெரிவிக்கப்பட்ட அபிப்பிராயம் என்ன ?*

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The matter was discussed at the Conference. No decision was taken.

(*b*) Secretary to Government, Education and Public Health Department attended the conference on behalf of this State. The principles underlying the scheme were welcomed. But various practical difficulties in giving effect to it were pointed out and it was suggested that the scheme should be suitably integrated with the academic courses in the Higher Secondary and University stages.

SRI A. VEDARATHNAM : ஹையர் செகண்டரி முடித்தபின் இந்த சேவையில் அவர்களை ஈடுபடுத்துவதைக் காட்டிலும், அவர்கள் பள்ளிப் படிப்பில் இம்மாதிரி சேவை மனப்பான்மையையும், சேவையில் ஈடுபடுகிற வாய்ப்பையும், அவர்களுடைய பாட திட்டங்களில் இணைப்பது நன்றாக இருக்கும் அல்லவா ? அதுபற்றி அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதைத்தான் என்னுடைய விடையில் சொன்னேன். அதுமாதிரி இந்த சர்க்கார் அங்கு சிபார்சு செய்திருக்கிறது.

MR. SPEAKER : Questions are over.

21st January 1961]

[*Note.*—**An asterisk * at the commencement of a speach indicates revision by the Member.**]

II.—ANNOUNCEMENT.

MR. SPEAKER : I have to announce to the House that the Governor has given his recommendation for the introduction in the Legislative Assembly of "The Madras General Sales Tax (Amendment) Bill, 1961".

III.—GOVERNMENT BILLS.

(1) THE MADRAS GENERAL SALES TAX (AMENDMENT) BILL, 1961.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I beg leave to introduce the Madras General Sales Tax (Amendment) Bill, 1961.

MR. SPEAKER : There is one small mistake. I do not know whether it has been brought to the notice of the Hon. Minister. This is the eleventh year of the Republic. It is printed in the Bill as the twelfh year of the Republic. I hope it would be corrected.

THE HON. SRI R. VENKATARAMAN : It will be corrected as eleventh year when the Bill is taken up for consideration.

MR. SPEAKER : All right.

The question is—

"That leave be granted for the introduction of the Madras General Sales Tax (Amendment) Bill, 1961".

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

(2) THE MADRAS ESTATES LAND (REDUCTION OF RENT) (AMENDMENT) BILL, 1961.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I beg leave to introduce the Madras Estates Land (Reduction of Rent) (Amendment) Bill, 1961. 9-30 a.m.

MR. SPEAKER : The question is—

"That leave be granted for the introduction of the Madras Estates Land (Reduction of Rent) (Amendment) Bill, 1961".

The motion was put and carried, and leave was granted.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I introduce the Bill.

Necessary amendment for changing the year will be brought when the Bill is taken up for consideration.

MR. SPEAKER : The Bill is introduced.

IV.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS.

MR. SPEAKER : It was agreed that one leader would speak every day. But I am told that no leader is speaking to-day and two leaders will be speaking on Monday. I have no objection. Then to-day more hon. Members will get a chance to speak. Now hon. Members will move their amendments to the motion of thanks

[21st January 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : இதுவரையிலும் புத்தகங்கள் கிடைக்கவில்லை என்று யாரிடத்திலிருந்தும் புகார் வரவில்லை என்று எனக்கு குறிப்பு தரப்பட்டிருக்கிறது. அத்துடன் இன்னும் அதிகமான பிரதிகள் அச்சடித்து பிரஸ்ஸில் வைத்திருக்க வேண்டும் என்று உத்தரவு போடப்பட்டிருக்கிறது. ஆகையினாலே எந்தக் காலத்திலும் புத்தகங்கள் இல்லை என்று சொல்லுவதற்கு இல்லை.

*Compulsory National Service by Students*

* 80 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) டெல்லியில் 1960-ம்ஆண்டு ஆகஸ்ட்டு மாதம் 19-ம் தேதியில் நடந்த கல்வி இலாகா காரியதரிசிகள் மகாநாட்டில், மெட்ரிகுலேஷனுக்குப் பிறகோ, அல்லது மேல் செகண்டரி கட்டத்திற்குப் பின்போ, மாணவர்களுக்குக் கட்டாய தேசீய சேவை திட்டத்தை அமல் நடத்துவது பற்றிய முடிவென்ன ?

(இ) இதில் நம் மாநிலத்தின் சார்பில் சென்றது யார் ? நம் மாநிலத்தின் சார்பாக இதுபற்றி தெரிவிக்கப்பட்ட அபிப்பிராயம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The matter was discussed at the Conference. No decision was taken.

(*b*) Secretary to Government, Education and Public Health Department attended the conference on behalf of this State. The principles underlying the scheme were welcomed. But various practical difficulties in giving effect to it were pointed out and it was suggested that the scheme should be suitably integrated with the academic courses in the Higher Secondary and University stages.

SRI A. VEDARATHNAM : ஹையர் செகண்டரி முடித்தபின் இந்த சேவையில் அவர்களை ஈடுபடுத்துவதைக் காட்டிலும், அவர்கள் பள்ளிப் படிப்பில் இம்மாதிரி சேவை மனப்பான்மையையும், சேவையில் ஈடுபடுகிற வாய்ப்பையும், அவர்களுடைய பாட திட்டங்களில் இணைப்பது நன்றாக இருக்கும் அல்லவா ? அதுபற்றி அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதைத்தான் என்னுடைய விடையில் சொன்னேன். அதுமாதிரி இந்த சர்க்கார் அங்கு சிபார்சு செய்திருக்கிறது.

MR. SPEAKER : Questions are over.

21st January 1961]

[*Note.*—**An asterisk * at the commencement of a speach indicates revision by the Member.**]

II.—ANNOUNCEMENT.

MR. SPEAKER : I have to announce to the House that the Governor has given his recommendation for the introduction in the Legislative Assembly of " The Madras General Sales Tax (Amendment) Bill, 1961 ".

III.—GOVERNMENT BILLS.

(1) THE MADRAS GENERAL SALES TAX (AMENDMENT) BILL, 1961.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I beg leave to introduce the Madras General Sales Tax (Amendment) Bill, 1961.

MR. SPEAKER : There is one small mistake. I do not know whether it has been brought to the notice of the Hon. Minister. This is the eleventh year of the Republic. It is printed in the Bill as the twelfh year of the Republic. I hope it would be corrected.

THE HON. SRI R. VENKATARAMAN : It will be corrected as eleventh year when the Bill is taken up for consideration.

MR. SPEAKER : All right.

The question is—

" That leave be granted for the introduction of the Madras General Sales Tax (Amendment) Bill, 1961 ".

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

(2) THE MADRAS ESTATES LAND (REDUCTION OF RENT) (AMENDMENT) BILL, 1961.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I beg leave to introduce the Madras Estates Land (Reduction of Rent) (Amendment) Bill, 1961. 9-30 a.m.

MR. SPEAKER : The question is—

" That leave be granted for the introduction of the Madras Estates Land (Reduction of Rent) (Amendment) Bill, 1961 ".

The motion was put and carried, and leave was granted.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I introduce the Bill.

Necessary amendment for changing the year will be brought when the Bill is taken up for consideration.

MR. SPEAKER : The Bill is introduced.

IV.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS.

MR. SPEAKER : It was agreed that one leader would speak every day. But I am told that no leader is speaking to-day and two leaders will be speaking on Monday. I have no objection. Then to-day more hon. Members will get a chance to speak. Now hon. Members will move their amendments to the motion of thanks

[21st January 1961

[Mr. Speaker]

to the Governor's Address. I shall call the number of the amendment and the hon. Member who has given notice of it will move it.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, I move the following amendments—

'*Add* at the end the following :

" . . . but regrets to note that no mention has been made about the steps taken to bring down the high prices of foodstuffs and other essential articles."

'*Add* at the end the following :

" . . . but regrets to note that no steps have been taken by this Government to impress on the Centre the urgent need to construct more railway lines in this State which are essential for the prosperity of this State."

The amendments were duly seconded.

MR. SPEAKER : There is one difficulty about the amendment given notice of by the hon. Member, Sri P. S. Chinnadurai. The hon. Member has given notice of a resolution on the same subject. So he has to choose either the resolution or this amendment. If, by any chance, the amendment given notice of by him is defeated, the resolution given notice of by him will be ruled out.

SRI P. S. CHINNADURAI : I am not moving the amendment standing in my name.

MR. SPEAKER : I take it that Sri P. S. Chinnadurai, Sri A. Govindaswamy, Sri M. Selvaraj and Sri S. M. Annamalai are not moving this amendment.

SRI P. S. CHINNADURAI : Sir, I move the following amendments :—

'*Add* at the end the following :

" . but regrets to note that no mention has been made made in regard to providing free education up to S.S.L.C. to the pupils of the State."

'*Add* at the end the following :

" . . . but regrets to note that no mention has been made in regard to desilting of all irrigation tanks in the State."

'*Add* at the end the following :

" . . . but regrets to note that no mention has been made in regard to installation of a heavy Electrical Equipment Factory in the State."

'*Add* at the end the following :

" . . . but regrets to note that no mention has been made in regard to establishing an oil refinery in the State."

The amendments were duly seconded.

SRI M. SELVARAJ : Sir, I move the following amendments :—

'*Add* at the end the following :

" . . . but regrets to note that no mention has been made in regard to compensation to be paid to land owners in Neyveli area."

21st January 1961] [Sri M. Selvaraj]

'*Add* at the end the following:

" . . . but regrets to note that no mention has been made in regard to the improvement to the Cuddalore Port."

The amendments were duly seconded.

SRI S. M. ANNAMALAI: Sir, I move the following amendments:—

'*Add* at the end the following:

" . . . but regrets to note that no mention has been made in regard to the plight of Handloom weavers in this State."

'*Add* at the end the following:

" . . . but regrets to note that no mention has been made in regard to the steps proposed to be taken to increase the per-capita income of the agricultural labourers."

The amendments were duly seconded.

SRI M. KALYANASUNDARAM: Sir, I move the following amendments:—

'*Add* at the end the following:

" . . . but regrets to note that no reference has been made about the crisis of the handloom industry in the State, particularly arising out of fall of export of handloom cloth like 'Bleeding Madras."

'*Add* at the end the following:

" . . . but regrets to point out that the Government have failed to release the long term political prisoners in the State."

'*Add* at the end the following:

" . . . but regrets to point out that the allotment for the Third Plan for the State is far from adequate to meet the essential needs of the State, particularly with regard to Irrigation Schemes, Industry and Agriculture."

'*Add* at the end the following:

" . . . but regrets to point out the failure of the Government to issue Rules in time and ensure the supply of books and forms to the newly constituted Panchayats and Panchayat Union Councils, resulting in ineffective functioning of those bodies."

SRI V. K. KOTHANDARAMAN: Sir, I second the amendments.

MR. SPEAKER: The motion and the amendments are now before the House for discussion. We shall now proceed with the discussion. I will allow fifteen minutes for each speaker. If more speakers come forward, I will have to reduce the time limit to ten minutes.

* SRI S. NAGARAJA MONIGAR: கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் நிகழ்த்திய உரைக்கு வந்தனம் செலுத்தும் முறையிலே, திரு. செல்வராஜ் அவர்கள் கொண்டுவந்திருக்கும் தீர்மானத்தை ஆதரித்து சில வார்த்தைகள்

பேச விரும்புகிறேன். இந்தத் தீர்மானத்தின்மீது பேசுவது பற்றி மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். காரணம் சொல்லத் தேவையில்லை. இப்பொழுது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கடைசி வருஷத்தில் இருந்துகொண்டிருக்கிறோம். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை வகுத்து, அதை எப்படி அமுல் நடத்துவது என்பதற்கான வழிவகைகளை ஆராய்ந்துகொண்டிருக்கிறோம். இதனுடைய அர்த்தம் என்னவென்றால், மிக்க தாழ்ந்த நிலையில் இருந்த ஒரு அடிமை நாடு சுதந்திரம் அடைந்த பின்பு எந்தவிதமான தொல்லைகளும், இடுக்கண்களும், வேலை நிறுத்தங்களும் குழப்பங்களும் இல்லாமல் முன்னேறிக் கொண்டு வருகிறது என்பதுதான். ஏனென்றால் நம்முடன் சுய ஆட்சி பெற்ற பல நாடுகளில் இன்று இருக்கிற சூழ்நிலையை நாம் பார்க்கிறோம். எவ்வளவோ வசதிகள் குறைவாக இருந்தாலும்கூட, மிக்க உயரிய காரியங்களை நாம் சாதித்திருக்கிறோம். நமக்கென்று ஒரு அரசியல் சட்டத்தை ஏற்படுத்திக் கொண்டு அதன்படி பெரிய அளவில் பொதுத் தேர்தல்களையும் நல்ல முறையில் நடத்தி வந்திருக்கிறோம். இந்தியாவிலுள்ள மற்ற மாகாணங்களை விட நமது சென்னை மாகாணம் மிகச் சிறந்த முறையில் முன்னேறி வருகிறது என்பதை இங்கேயுள்ள ஒவ்வொருவரும், மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் ஒப்புக்கொள்ளவேண்டும். அதோடு மட்டுமல்லாமல், உலக மக்கள்கூட இந்தியாவின் சிநேகத்தையும், ஒத்துழைப்பையும் நாடுகிற ரீதியிலே நாம் இருந்து வருகிறோம். வருஷா வருஷம் அநேக தடவைகளில் நாம் இங்கே கூடுவதும், உயரிய முறையில் கவர்னர் பெருமான் அவர்கள் நம் நாட்டிற்குச் செய்தவைகளையும், செய்ய வேண்டியவைகளையும் வழிவகுத்து, இரண்டு சபைகளையும் கூட்டி நிகழ்த்தும் உரைகள் எல்லாம் நமக்கு மகிழ்ச்சியைத் தராமல் வேறு எதைக் கொடுக்க முடியுமென்றுதான் நான் கேட்க ஆசைப்படுகிறேன். இந்த நேரத்தில் ஒன்றை மட்டும் சொல்ல விரும்புகிறேன். உள்ளதைக் கொண்டு மனத்தைச் சந்தோஷப்படுத்தி, சாந்தப்படுத்திக் கொண்டால் தான், நாம் மேலும் பெறவேண்டியவைகளை அடைந்து முன்னேற முடியும். இதற்காக பாடுபட்டவர்கள் திருப்தி அடைந்து, சந்துஷ்டியுடன் வேலை செய்தால், குறிப்பாக நமது ஊழியர்களும், மற்றவர்களும் வேலை செய்தால், அந்த அளவுக்கு நாம் முன்னேற முடியும். அப்படியிருக்கையில், ஒன்றும் இல்லாதவர்களுக்கு இவ்வளவு கொடுத்துவிட்ட நேரத்தில், இன்னும் எவ்வளவு கொடுத்தாலும் போதாது என்று அதிகமாக ஆசைப்படுவது நல்லதல்ல. இதுவரை நடந்தவைகளுக்கு நாம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளோம். நமது நாட்டில் எத்தனையோ புலவர்களும், அறிஞர்களும் தோன்றியிருக்கிறார்கள். ஆனாலும் வள்ளுவரைத்தான் நாம் அதிகமாகப் புகழவேண்டிய நிலையிலிருக்கிறோம். வள்ளுவர் அவர்களைப் புகழவில்லையானால், நாம் நன்றிகெட்டவர்களாக இருப்போம். "நன்றி மறப்பது நன்றன்று, நன்றல்லது அன்றே மறப்பது நன்று" என்று வள்ளுவர் சொல்லியிருக்கிறார். இந்த மாதிரி சட்டசபை கூடுகிற நேரங்களிலெல்லாம், நமது நாட்டிலே எத்தனையோ சிக்கல்கள், கலகங்கள், குழப்பங்கள், வேலைநிறுத்

21st January 1961] [Sri S. Nagaraja Monigar]

தங்கள் இருந்துகொண்டிருந்திருக்கின்றன. நம்முடைய மாகாணத்திலே அப்படியெல்லாம் காண்பதற்கில்லை. அமைதியாகவே இருந்துகொண்டிருக்கிறோம் என்பது அவரவருடைய நெஞ்சைத் தொட்டுப் பார்த்துக்கொண்டால் தெரியும்.

இன்று நாம் பார்த்தால், கல்வி வசதி, நீர்ப்பாசன வசதி, ரோடுகள் வசதி, உணவு அபிவிருத்தி ஆகிய வகைகளில் நாம் முன்னேறிக் கொண்டுதான் வருகிறோம். முன்னேற்றத்தின் அறிகுறிக்கு உதாரணமாக, சமீபத்தில் நடந்த பொங்கலின்பொழுது பொங்கல் வாழ்த்துச் செய்திகள் எவ்வளவு அதிகமாக அனுப்பப்பட்டிருக்கின்றன என்பதை நாம் பார்க்கவேண்டும். எந்தக் கடைக்குப் போனாலும் விதவிதமான வாழ்த்துச் செய்திகளும், அவற்றை அனுப்புவதற்கு விதவிதமான உறைகளும் விற்பதைப் பார்த்தோம். இது ஒரு நல்ல அடையாளம். ஆகவே இந்த உரைக்கு வந்தனம் செலுத்தும் தீர்மானத்தை மிக்க மரியாதையோடு நான் ஆமோதிக்கிறேன். அத்துடன் கவர்னர் அவர்களுக்கும், நமது அரசாங்கத்திற்கும் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். சமையல்காரனைப் பிடிக்காது, அவனைக் கண்டால் ஆகாது. ஆனால் அவன் செய்யும் பாயாசம், சாம்பார், ரசம் எல்லாம் நான் விடமாட்டேன் என்று கூறுபவன் நான் அல்ல.

பிரிட்டிஷ் ராணி அவர்கள் நமது ராஜ்யத்திற்கு விஜயம் செய்யவிருக்கிறார்கள். காந்தி மகான் வகுத்த கொள்கையைக் கடைப்பிடித்து உலகத்திற்கே ஒரு வழிகாட்டியாக நாம் இருந்து வருகிறோம். நம்மை அடக்கி ஆண்டவர்களின் சம்பந்தம் அறுபட்டுப் போய் 13 ஆண்டுகள் ஆகிவிட்டன. அப்படியிருந்தும் அந்த நாட்டுடனும், மற்ற நாடுகளோடும் சகோதரத் தன்மையுடனும், நட்புடனும் நாம் வாழ்ந்து வருகிறோம். ராணி அவர்கள் இங்கே வரும்பொழுது நமது கார்ப்பொரேஷன் மேயர் அவர்களும் கூட வரவேற்பார்கள் என்று பத்திரிகையில் படித்தேன். மிக்க சந்தோஷம். "இந்த நாட்டான், அந்த நாட்டான்" என்று சமீபத்திலே இருக்கிற வட நாட்டானை வெறுத்தாலும், 6,000 மைல்களுக்கு அப்பாலே இருந்து வருகிற ராணி அம்மையாரை அந்தக் காலத்தில் தங்களுக்கு ரொம்ப வேண்டியவர்களாக இருந்து, உங்களை நாங்கள் என்றும் விட்டுப் பிரியமாட்டோம் என்று சொல்லிவந்தவர்கள்—அழைப்பதுபற்றி மிக்க சந்தோஷம். இதை நான் சொல்லுகின்ற பொழுது கடமைக்குக் கட்டுப்பட்டவர்கள் குறுக்கு வழியில் போகமாட்டார்கள், விட்டு விடமாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

அதே சமயத்திலே, இன்னும் முன்னேற வேண்டியிருப்பதன் அவசியத்தையும், மூன்றாவது திட்டம் பற்றியும், குறிப்பாக என்னுடைய தொகுதி பற்றியும் ஒன்றிரண்டு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அதிகாரத்தில் பரவல் முறை கையாளப்படுகிறது. அது மிகவும் வரவேற்கத் தக்கது. நீர்ப்பாசனம், மின்சாரம் முதலிய பல துறைகளிலும், பரவல் முறை கையாளப்படவேண்டும் என்று நீண்ட நெடுநாட்களாகக் கேட்டு வந்திருக்

[Sri S. Nagaraja Monigar] [21st January 1961

இரும். சாதாரண கடிதப் போக்கு வரத்துக்கும் பல மாதங்கள், சில வருடங்கள்கூட காத்திருக்க வேண்டிய நிலைமைதான் இருந்து வந்திருக்கிறது. இந்த பஞ்சாயத்துக் கவுன்சில்கள் ஏற்படுத்தி, அதிலேயும் இந்தப் பரவல் முறை கையாளப்படுவது, மிக மிக முன்னேற்றகரமானது. சிறிய சிறிய சுயராஜ்யங்கள் ஏற்படும்; வோட்டர்கள் வோட்டுப் போட்டு, பிரதிநிதிகளை அனுப்பி விட்டு சும்மா இருந்து விடுவார்கள்; அவர்களுக்கும், தங்கள், தங்கள் பிராந்தியங்களிலே, பொறுப்பும், பெருமையும் உள்ள காரியங்களைத் தாங்களே செய்ய வாய்ப்பு கொடுக்கப் படுகிறது. அவர்கள் பிறர் மீது மட்டும் குறை சொல்லிக் கொண்டு இருந்து விடாமல், தாங்களே தங்கள் பகுதிகளில் சிற்சில காரியங் களைச் செய்யும் பொறுப்பை ஏற்றாக வேண்டும். மந்திரிகள் செய்யவில்லை, ஜில்லா போர்டு தலைவர் செய்யவில்லை என்றெல்லாம் குறை சொல்லிக் கொண்டிராமல், தாங்களே காரியங்களைச் செய்ய வாய்ப்பு அளித்திருப்பது, மிகுந்த அனுகூலமானது என்பதில் சந்தேகம் இல்லை. அது எதிர்காலத்தில் பக்குவமான பிரஜை களாகப் போவதில், குறைகளை நீத்து காரியங்களைச் செய்வதில், நாட்டை முன்னுக்குக் கொண்டு வர பணிசெய்வதில் மக்களை ஊக்குவிக்கும் பயிலுவிக்கும் இந்த பஞ்சாயத்து கவுன்சில் ஸ்தாபனங்கள். ஆகவே இவை மிகவும் வரவேற்கத் தக்கவை யாகும். அடுத்த ஏப்ரல் மாதத்திற்குள்ளாக இது எல்லாவிடங் களிலும் அமைந்து நல்ல செயலாற்ற எல்லோரும் ஒத்துழைத்து நாட்டை முன்னுக்குக் கொண்டுவர பணி புரியவேண்டும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

இன்னும் ஹரிஜனங்களைத் தனியாகவே பாவிப்பது நல்லதல்ல. அப்படி பிரித்துப் பேசவேண்டிய காலம் முடிந்து விட்டது. அவர் களுக்கு நாம் பொருளாதாரத் துறையில் எவ்வளவோ நன்மை களைச் செய்து வருகிறோம். ஆனால், சமூகத் துறையில் அவர்கள் நன்கு முன்னேற நாம் செய்யும் காரியங்கள் காந்திஜி இருந்த போது நடந்துவந்த அளவுக்கு இப்பொழுது நடக்கவில்லை. சட்ட ரீதியில், தீண்டாமை ஒழிப்பு, மது விலக்கு முதலிய துறைகளில் பல ஆண்டுகளுக்கு முன்பே நல்ல பணியாற்றியிருக்கிறோம். ஆனால், ஹரிஜனங்களை ஒன்றுபடுத்தி, சமூகத்துறையில் அவர்கள் முன்னேறச் செய்ய வேண்டிய வேலைகள் சரிவரச் செய்யப்பட வேண்டும். அப்படிப்பட்ட வேலைகளை நாம் மேற்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

மின்சாரம் பொறுத்த மட்டில், இந்த சபை கூடுவதற்கு ஒரு தினம் முன்னால், குந்தா மின்சார திட்டம் இரண்டாவது அங்கம் வேலை முடிந்திருக்கிறது.

(Sri A. Vedarathnam in the Chair.)

அவைகளெல்லாம் நல்ல நன்மையைக் கொடுக்கக் கூடியது என்பதைச் சொல்லத் தேவையில்லை. இந்த மினிமம் சார்ஜ் ஒரு குதிரை வேகத்திற்கு ரூ. 50 என்றிருந்ததைக் குறைக்க வேண்டும் என்று எல்லோரும் பல நாட்களாகப் பேசி வந்திருக்கிறோம்.

21st January 1961] [Sri S. Nagaraja Monigar]

இப்பொழுது மிகப் பிற்போக்கான பகுதிகளுக்கு ரூ. 35 என்றும், மற்ற பகுதிகளுக்கு ரூ. 45 என்றும் போட்டிருப்பதானது மகிழ்ச்சிக்குரிய விஷயம். ஆனால், சேலம் ஜில்லாவைப் பொறுத்த மட்டில், சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அந்த ஜில்லா 36 லட்சம் ஜனத்தொகை கொண்டது; இன்றுள்ள எல்லா ஜில்லாக்களையும் விட பெரிது. ஆனால் அங்கு பெரிய கல்வி வசதி ஒன்றுமே கிடையாது. அந்த ஜில்லா கல்வியில் மிகவும் பின் தங்கியிருக்கும் ஒரு ஜில்லா. அங்கு முனிசிபாலிடியார் முயற்சியால், மிகக் கஷ்டத்தோடு ஒரு காலேஜ் நடத்தி வந்திருக்கிறார்கள். ஆனால், அங்கு ஒரு கல்லூரி போதாது. கனம் கல்வி அமைச்சரவர்கள், போதிய மாணவர்கள் இல்லை என்று சொன்னார்கள். ஒன்றிரண்டு வருஷங்களுக்கு அப்படி இருந்திருக்கலாம். ஆனால், இப்பொழுது நிலைமை வேறு. அங்கு இடம் இல்லாமல், மற்ற இடங்களுக்கு மாணவர்களை அனுப்ப வேண்டிய நிலைமைதான் இருக்கிறது. ஆகவே, வட பகுதி சேலத்தில் மற்றொரு கல்லூரியை அமைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஒரு எஞ்சினியரிங் காலேஜ் ஒன்று மத்திய சர்க்கார் கொடுக்கப் போவதாகத் தெரிகிறது. நிச்சயமாக அதை சேலம் ஜில்லாவில் அமைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஜில்லா வாரியாகப் பார்த்தால், சில ஜில்லாக்களில் அதிகமாகக் கல்லூரிகள் ஏற்படுகின்றன. ஏற்படட்டும்; சந்தோஷம். ஆனால், அதே போல, சேலத்திலும், மிகப் பின் தங்கியிருக்கும் அந்த ஜில்லாவிலும் ஒன்று அமைக்க வற்புறுத்தவேண்டும்.

இந்தியா பூராவிலுமே, எடுபட்ட ரயில் பாதைகளில் ஐந்தில் ஒரு பங்கு சேலத்தில் எடுபட்டுவிட்டது. சுமார் 100 மைல் அளவுக்கு எடுக்கப்பட்டிருக்கிறது. அதிலும் வட சேலம் பகுதியில் ரயில் போடுவதாக வேலைகள் ஆரம்பிக்கப் பட்டு, மேலே நடைபெறவில்லை. நம் சர்க்கார் அதை இந்த மூன்றாவது திட்டத்திலேயே சேர்த்து வேலை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இத்தனை நாட்களாக சேலம் இரும்பு, சேலம் இரும்பு என்று சொல்லிக் கொண்டு இருந்து விட்டு, நெய்வேலிக் கரி எடுத்தால் அங்கு தொழிற்சாலை வரும் என்றெல்லாம் சொல்லி விட்டு, இப்பொழுது அதை நெய்வேலியில் வைப்பதா, சேலத்தில் வைப்பதா என்றெல்லாம் சர்ச்சை நடக்கிறது. நெய்வேலியில் வைப்பதானாலும் பரவாயில்லை. ஆனால், 100 கோடி ரூபாய் அளவில் அங்கு பெரியதொரு திட்டம் இருக்கும்போது, இத்தனை நாளாகச் சொல்லிவந்ததற்கு மாறாக, நிபுணர்கள் படும் கஷ்டங்களுக்காக, நாட்டில் ஒரு பகுதியின் கஷ்டத்தை அடியோடு மறக்கக் கூடாது என்று தான் சொல்லுவேன். ஆகவே, அந்த தொழிற்சாலையை சேலத்திலேயே வைக்க, முடிந்த அளவு பாடுபட வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இன்னொரு விஷயம். இது மத்திய சர்க்கார் சம்மந்தப்பட்ட காரியமோ என்னவோ; சூலமங்கலத்திலிருந்து ஜோலார்பேட்டை வழி செல்லும் நான்கு மெயில் வண்டிகளில் ஒன்று கூட இந்த 72

[Sri S. Nagaraja Monigar] [21st January 1961]

மைல் தூரத்திலும் அங்கு நிற்பதில்லை. இதனால் தபால் முதலிய காரியங்களில் பல தாமதங்களும் கஷ்டங்களும் ஏற்படுகின்றன. ஆகவே இதிலும் ஆவன செய்ய வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அரசாங்கம் செய்யும் காரியங்களுக்கு போதிய பப்ளிசிடி, விளம்பரம் இருக்க வேண்டும். இப்பொழுது விளம்பரம் போதாது. ஜில்லாவுக்கு ஒரு அதிகாரி என்று போட்டு இருப்பதாகத் தெரிகிறது. ஒரு அதிகாரி இருந்து என்ன உபயோகம் என்று தெரியவில்லை. அது சரியாகப் படவில்லை. ஆகவே, ப்ளாக்குகளில் இருக்கும் ப்ளாக்கு அதிகாரிகளிடமே இந்த விளம்பர வேலையையும் ஒப்படைத்து, நல்ல பணியாற்ற வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

பல நன்மைகளையும் செய்யும் நம் சர்க்காருடன் அங்கத்தினர்கள் ஒத்துழைத்து, இந்த திட்டங்களையெல்லாம் வெற்றி பெறச் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, கவர்னர் பெருமான் அவர்களுக்கு வந்தனம் கூறும் தீர்மானத்தை ஆமோதித்து என் வார்த்தைகளை முடித்துக் கொள்ளுகிறேன். வணக்கம்.

* **Sri G. G. GURUMURTHI** : தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் ஆற்றிய உரைக்கு வந்தனம் கூறும் தீர்மானத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கவர்னர் பெருமான் தன் உரையில் விவசாய உற்பத்தி பற்றியும், மற்ற தொழில்கள் பற்றியும், ஏனைய முன்னேற்றகரமான காரியங்கள் பற்றியும் கூறி, குறிப்பாக விவசாய வளர்ச்சிபற்றிச் சொல்லும்போது, நம் மாகாணம் 15½ லட்சம் டன் உற்பத்தி பெருக்கு, பெரிய நீர்பாசன திட்டங்கள், சிறிய நீர்பாசன திட்டங்கள் நடுத்தர நீர்பாசன திட்டங்கள் இவைகளைப் பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதே சமயத்தில், உர வினியோகம் பற்றியும், உரத் தொழிற்சாலை பற்றியும் கூறியிருக்கிறார்கள். இப்படிப்பட்ட பல நல்ல திட்டங்களையும் நாம் வரவேற்கக் கடமைப்பட்டிருக்கிறோம். ஆனால் இந்த திட்டங்களெல்லாம், காலாகாலங்களில் நிறைவேற்றப்பட்டால்தான் விவசாயிகளுக்கு மிகுந்த சௌகரியமாக இருக்கும். இந்த திட்டங்களால் உணவு உற்பத்தி பெருகும் என்பதில் சந்தேகமில்லை. சிறிய நீர்பாசனத் திட்டங்களுக்காக, நம் சர்க்கார் சென்ற ஐந்தாண்டுத் திட்டத்தில் விட, இப்பொழுது நாலு கோடி ரூபாய் அதிகமாக ஒதுக்கியிருக்கிறார்கள். நடைமுறையில், சிறிய நீர்பாசனத் திட்டங்கள் செய்வது திருப்தியாக இல்லை. குறிப்பாக பழைய ஏரிகளையும், கண்மாய்களையும் சரி செய்து, மராமத்து செய்து, தண்ணீர் பிடிப்புக்கு ஏற்றவைகளாகச் செய்தால்தான் சௌகரியமாக இருக்கும். அதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்திருப்பதாக தெரியவில்லை. நீண்ட கால தாமதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. குறிப்பாக, புதிய சில கண்மாய்கள், ஏரிகள் ஏற்படுத்தப் பல திட்டங்கள் போடப்பட்டிருந்தாலும் நடைமுறையில் வேலை

21st January 1961] [G. G. Gurumurthi]

துவங்கியதாகக் காணேம். குறிப்பாக, கோவை, சேலம் ஜில்லாக்களில் இந்தத் திட்டங்களையெல்லாம் பரிசிலனை செய்வதற்காக ஒரு தனி நீர்ப்பாசன டிவிஷன் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஒன்றரை ஆண்டு ஆகியும் இன்னும் எந்த விதமான திட்டத்தையும் எடுத்து நிறைவேற்றியதாகத் தெரியவில்லை. ஒவ்வொரு தடவையும் எஸ்டிமேட் தொகை அதிகமாக இருக்கிறதென்று காரணம் காட்டித் திருப்பி அனுப்புவதுமாகிய நிலைமை இருக்கிறது. அதற்குக் காரணம் என்னவென்ருல், எக்கரா ஒன்றுக்கு ஒரு டன் உற்பத்தி ஆவதற்கு குறிப்பிட்ட தொகைதான் செலவு செய்ய வேண்டும் என்ற அரசாங்கத் திட்டத்தின் அடிப்படையிலே நடைபெற்று வருவதால் எஸ்டிமேட் அதிகமாக ஆகிறது என்ற காலதாமதம் ஏற்படுகிறது. இதுபோன்ற சிறிய பாசனத் திட்டங்களை எடுத்துக்கொள்ளும்போது, நேரடியாகப் பாசனத்திற்கு வரக் கூடிய ஏக்கராக்களை மட்டும் கணக்கிடுவது சரியானதல்ல. மறைமுகமாகப் பல நன்மைகள் ஏற்படுவதையும் கவனிக்கவேண்டும். குறிப்பாக, பாசனத்திற்கு வரும் நிலங்களைத் தவிர, ஒரு மைல், இரண்டு மைல் சுற்று வட்டாரத்தில் உள்ள கிணறுகளில் தண்ணீர் 'லெவல்' அதிகமாகிறது. அதனுல், நீர்ப்பாசன வசதியும், உணவு உற்பத்தியும் பெருகுகிறது. அதைக் கவனிப்பதே இல்லை. அதை விட முக்கியமானது என்னவென்ருல், மற்ற ஜில்லாக்களில் இருக்கிறபடி, ஏரி மண்ணை அரசாங்கமே செலவு செய்து எடுத்துக் கொட்டவேண்டுமென்று எதிர்பார்க்கவில்லை. சேலம், கோவை ஜில்லாக்களில் ஏரிகளில் இருக்கும் மண்ணை எடுக்க, விவசாயிகளிடமிருந்து வண்டிக்கு இவ்வளவு பணம் தரவேண்டுமென்று சொன்னுல், அவர்கள் தங்கள் நிலங்களுக்கு எடுத்துக் கொண்டுபோக நல்ல வாய்ப்பு இருக்கிறது; ஏரி மண் நல்ல எருவாகும். கீழ் பவானிப் பிரதேசங்களிலேகூட, இதை எடுக்கப் பலர் தயாராக இருக்கிருர்கள். ஆனுல், அரசாங்கம் அனுமதிப்பதில்லை. நேரடியாக வரும் பலன்களைத் தவிர, மறைமுகமாக ஏற்படக்கூடிய பல நன்மைகளும் இருக்கின்றன. இதையெல்லாம் கவனிக்காமல், திட்டத்திற்கென்று குறிப்பிட்ட தொகையை ஒதுக்கி விடுவதால் மட்டும் பிரயோஜனமில்லை. அதை நடைமுறையில் கொண்டுவர, ஒரு ஏக்கராவுக்கு இவ்வளவு செலவு செய்யவேண்டுமென்ற வரையறையை அதிகப்படுத்தி, இந்த வேலைகளை உடனடியாக எடுத்துக்கொள்ளவேண்டும் சில காலங்களில் மாத்திரம் அதிகமாக மழை பெய்து மண் அரிப்புச் செலவு ஏற்படுவதைத் தடுக்க இந்தத் திட்டங்களை உடனடியாக எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கின்றேன்.

நாட்டில் பல நீர்ப்பாசனத் திட்டங்கள் பரிசிலனை செய்யப் பட்டிருக்கின்றன. அவைகளை எடுத்துக்கொள்வதில் கால தாமதம் ஏற்படுகிறது. குறிப்பாக, பவானி தாலுகாவில், மணியாச்சித் திட்டத்தை எடுத்துக்கொண்டால் ஐயாயிரம் ஏக்கரா பாசன வசதி பெறக்கூடிய வாய்ப்பு இருக்கிறது. அதற்கும் எஸ்டிமேட் தயார்

[G. G. Gurumurthi] [21st January 1961

செய்து, திட்டத்தை எடுத்துக்கொள்ள சாங்ஷன் செய்து அனுப்பு வதிலே நீண்ட காலதாமதம் இருப்பதாகத் தெரிகிறது. அதை மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது எடுத்துக் கொள்ள வேண்டும்.

மிக முக்கியமாக இருக்கும் பழைய நீர்ப்பாசனத் திட்டங் களிலும், புதிதாக நிறைவேற்றப்பட்டிருக்கும் நீர்ப்பாசனத் திட்டங்களிலும்கூட, சில பகுதிகள், கீழ்க் கோடியிலே இருக்கும் பிரதேசங்களெல்லாம் அபிவிருத்தி அடையாமல் இருக்கின்றன. அதற்குக் காரணம் 'பீல்டு போதீஸ்' எல்லாம் அரசாங்கம் ஆர்ஜிதம் செய்து கொடுக்க வசதி இல்லாததுதான். இதற்காக பழைய வாய்க்கால்களை மராமத்து செய்ய ஏற்பாடு செய்ய வேண்டும். அரக்கன்கோட்டை, பெருமுகை அத்தாணி வாய்க் கால்கள் 1,800 ஏக்கரா சாகுபடிக்காக வெட்டப்பட்டிருக்கின்றன. இருந்தாலும், ஆயிரம் ஏக்கராவுக்குத்தான் தண்ணீர் விடப்பட் டிருக்கிறது. இன்னும் எண்ணூறு ஏக்கராவுக்குத் தண்ணீர் பாய்ச்சப்படாமல் இருக்கிறது. இதற்கு அரசாங்கமே பொறுப் பேற்று, தேவையானல் விவசாயிகளிடமிருந்து 25 சத விகிதம் தொகையை வசூல் செய்து, அந்த வேலையை உடனடியாகச் செய்து முடிக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

போக்குவரத்து வசதியைப்பற்றி கவர்னர் பெருமான் அவர்கள் தம்முடைய உரையில் குறிப்பிட்டிருக்கிறுர்கள். குறிப்பாக, ரயில்வேக்கள்பற்றியும், துறைமுகங்கள்பற்றியும் குறிப்பிட்டிருக் கிறுர். ஆனல், கிராம ரஸ்தாக்களைப்பற்றியும், இப்பொழுது கிராமங்களுக்கு போடப்பட்டிருக்கும் ரஸ்தா அபிவிருத்தியைப் பற்றியும் எந்த விதமான குறிப்பும் இல்லை. கிராமப் போக்கு வரத்துக்கான ரோடுகளை எடுத்துக்கொள்ளும்போது, திட்டங்களில் சேர்க்கப்படுவதைத்தான் எடுத்துக் கொள்ளுகிறுர்கள். திட்டங் களில் சேர்க்கப்படவில்லையென்றுல், எந்த விதமான அபிவிருத் திக்கும் வாய்ப்பு கிடையாது. தார் ரோடு போடுவது, தார் ரோடை கான்க்ரீட் ரோடாகப் போடுவது போன்ற பல திட்டங் களுக்காக லட்சக்கணக்கான ரூபாய்களை ஒதுக்கித் தருகிறுர்களே தவிர, சாதாரணமாக கிராம ரஸ்தாக்கள், பெரிய நகரங்களையும் கிராமங்களையும் இணைக்கக்கூடிய ரஸ்தாக்கள் இவைகளைப்பற்றிய அபிவிருத்தித் திட்டங்கள் ஒன்றும் இல்லை. பஞ்சாயத்து யூனியன் வந்து விட்டதனல் இனிமேல் அவை செய்யலாம் என்று விடப்பட் டிருக்கிறது. ஜில்லா போர்டு செயல்பட்ட காலத்திலே வருவாய் போதாமல் கடன்பட்ட நிலைமையில் இருந்து ரோடு வேலையைச் செய்ய முடியவில்லையென்றுல், புதிதாக வரும் பஞ்சாயத்து யூனியன்கள் இவ்வளவு பெரிய பொறுப்பை ஏற்று கிராம ரஸ்தாக்களை எப்படி அபிவிருத்தி செய்ய முடியும் என்று தோன்ற வில்லை. ஆகவே, கிராம ரஸ்தா அபிவிருத்திபற்றிய திட்டங்களை அவசியம் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திலே சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

21st January 1961] [G. G. Gurumurthi]

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றிவிட்டு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத்தில் இருக்கிறோம். இருந்தாலும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக் கொண்ட பல வேலைகள் இன்னும் நடைபெறாமல் இருக்கின்றன. அவைகளுக்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் முதல் இடம் கொடுப்பதாகச் சொல்கிறார்கள். அவைகளில் இருக்கும் கஷ்டம் என்னவென்றால், அப்பொழுது எஸ்டிமேட் தயாரிக்கும்போது—இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் தயார் செய்யும்போது—அதிலே தோராயமாக ஒரு தொகையை ஒதுக்கியிருக்கிறார்கள். இப்பொழுது பார்க்கும்போது விலைவாசி ஏற்றத்தினால், அப்பொழுது ஒதுக்கிய தொகையைவிட இரண்டு பங்கு அதிகமாகத் தேவையாக இருக்கிறது. அதைக் காரணம் காட்டி, அப்பொழுது என்ன தொகை ஒதுக்கியிருந்தார்களோ அந்தத் தொகைக்குள்ளேயே இந்த வேலை செய்யப்படவேண்டுமென்று அரசாங்கம் சொல்கிறது. இந்த மிகக் குறைந்த தொகையிலே, ரஸ்தாக்கள் அபிவிருத்தி செய்வது போன்ற எந்த விதமான அபிவிருத்தி வேலைகளையும் செய்வதற்கு முடியாத நிலைமை இருக்கிறது. அதன்படி என்னுடைய தொகுதியைச் சேர்ந்த இரண்டு வேலைகள் இருக்கின்றன. கொள்ளேகாலத்தை இணைக்கும் செல்லம்பாளையம்—கொள்ளேகாலம் ரஸ்தா வேலை இந்த விதமாக நிறைவேற்றப்படாமலிருக்கிறது. அது இன்னும் எடுத்துக் கொள்ளும் நிலைமை இல்லாமல் இருக்கிறது. அதுபோன்று பவானி நதிக்குத் பெருந்தலையூர்—ஆப்பக்கூடலை இணைக்கும் பாலம் சம்பந்தமான வேலையும் அதே நிலைமையில் இருக்கிறது. அதையும் திட்டத்திலே சேர்த்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கின்றேன்.

மலைப் பிரதேசமாக இருக்கும் பகுதிகளில் தனிக் கவனம் செலுத்தி, போக்குவரத்து வசதி, குடி தண்ணீர் வசதி, ஆரம்பப் பாடசாலை வசதி போன்ற பல வசதிகளைச் செய்து கொடுக்க வேண்டும். அங்கு பல வசதிகள் இல்லாத நிலைமையைப் பார்க்கின்றோம்.

அடுத்தபடியாக, கவர்னர் உரையில் மின்சாரத்தைப்பற்றிக் கூறும்போது, எல்லாக் கிராமங்களுக்கும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் சப்ளை கொடுத்துவிடுவோம் என்று தெரிவித்திருக்கிறார்கள். புதிதாக மின்சார விஸ்தரிப்பு ஏற்படும்போது, ஏற்கெனவே மின்சார சப்ளை பெற்றிருக்கும் கிராமங்களிலுள்ள விவசாயிகளின் கஷ்டங்களையும் கொஞ்சம் யோசிக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். மேலும் மேலும் கிராமங்களுக்கு மின்சாரம் கொடுத்துக் கொண்டிருக்கும் காரணத்தால், ஏற்கெனவே சப்ளை உள்ள கிராமங்களில் மின்சார பம்ப் செட் சரியாக ஓடக்கூடிய நிலைமையில் இல்லை. அதனால் விவசாயிகளுக்குப் பெரும் நஷ்டம் ஏற்படுகிறது. அதை நிவர்த்தி செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

ஆறு வயது முதல் 11 வயது வரையிலுள்ள குழந்தைகளுக்கெல்லாம் கட்டாய ஆரம்பக் கல்வி கொடுக்கவேண்டுமென்று நாம் திட்டம் செய்திருக்கிறோம். இந்தத் திட்டத்தின் பிரகாரம்

[G. G. Gurumurthi] [21st January 1961

கிராமங்களில் இப்பொழுது இருக்கும் பாடசாலைகளுக்குப் போதிய கட்டிட வசதியும், ஆசிரியர்களுக்கு வீட்டு வசதியும் இல்லாத நிலைமையும் இருக்கிறது. இப்பொழுது இருக்கும் ஓராசிரியர் பள்ளிகளில் பல போதிய கட்டிட வசதி இல்லாமல் சாலையிலும், மாட்டுக் கொட்டகையிலும் நடக்கின்றன. கட்டாய ஆரம்பக் கல்வித் திட்டம் அமுலுக்கு வருமானால், இப்பொழுதுள்ள இடவசதி போன்று இரண்டு பங்கு இடவசதி கிராமங்களில் செய்து கொடுக்க வேண்டும். இதை எப்படிச் சமாளிக்கப் போகிறார்கள் என்று தெரியவில்லை. கிராம மக்கள் தாங்களாக வந்து இந்த உதவிகளைச் செய்யக்கூடிய ஆற்றலும், சௌகரியமும் அவர்களுக்கு இருக்கும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. இந்த வசதிகளை அரசாங்கமே செய்து கொடுத்தால்தான் கட்டாய ஆரம்பக் கல்வித் திட்டம் நல்ல வகையிலே பயன்படும். அப்பொழுதுதான் மக்கள் அதை நன்றாகப் பயன்படுத்திக் கொள்வார்கள். இல்லையென்றால், ஏதோ திட்ட அளவிலே சொல்லிக் கொண்டிருக்கலாமே தவிர, உண்மையிலேயே மாணவர்கள் வந்து கல்வி வசதி பெற வாய்ப்புக் கிடைக்காது என்று நான் சொல்லிக்கொண்டு இத்துடன் என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கின்றேன்.

10–00 a.m. SRI M. SELVARAJ : மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, கவர்னர் உரையின் மீது என் கருத்துக்களைக் கூற விரும்புகிறேன். சமீபத்தில் ஏற்பட்ட வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்குப் பெரும் அளவுக்கு சர்க்கார் நிவாரண வேலை செய்திருப்பதாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதிலே முக்கியமாக எங்களுடைய மாவட்டத்திலே போன ஆண்டு அடித்த பெரும் மழையின் காரணமாக பல பாதைகளும், சேதப்பட்ட பாலங்களும் ரிப்பேரா யிற்று. அவைகளை உடனே கவனித்து மராமத்து செய்யாத காரணத்தினால் இன்றையதினம் மோட்டார் வாகனங்கள், மாட்டு வண்டிகள் முதலிய போக்குவரத்து எதுவும் நடைபெறமுடியாமல் பெரும் தடையாக இருக்கிறது. உடனடியாக அவற்றைக் கவனித்து ரிப்பேர் செய்யவேண்டுமென்று அதிகாரிகளைக் கேட்டால் எங்களுக்குப் போதுமான நிதி வசதி செய்து தரவில்லை என்று அவர்கள் கூறுகிறார்கள். ஆகவே அங்கே எவ்வித வேலையும் நடைபெறாமல் கிடக்கின்றது. ஆனால் இங்கே கவர்னர் தம் உரையில் நிவாரண வேலைகள் எல்லாம் பெரும் அளவுக்கு நடைபெற்று வருவதாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். மேலும் போன ஆண்டு வெள்ளத்தின் காரணமாகப் பாதிக்கப்பட்ட ஏரிகளும், குளங்களும் மராமத்து இலாகாவினால் இன்னமும் எவ்விதமான ரிப்பேரும் செய்யப்படாமல் கிடக்கின்றன. எங்கள் வட்டத்தில் மேமாத்தூர் அணை இருக்கிறது. அதன் மூலமாக ஏழாயிரம் ஏக்கரா நிலத்திற்கு நீர்ப்பாசன வசதி கிடைத்து வந்தது. விவசாயிகள் அதைக்கொண்டு நல்ல முறையில் சாகுபடி செய்து வந்தார்கள். போன ஆண்டு ஏற்பட்ட வெள்ளத்தின் காரணமாக அந்த அணை அடித்துச் செல்லப்பட்டுவிட்டது. ஆகவே இவ்வாண்டு வருகிற தண்ணீரைத் தேக்கி வைக்க

21st January 1961] [Sri M. Selvaraj]

முடியாமல் ஆற்றில் வீணுகத் தண்ணீர் ஓடிக்கொண்டிருக்கிறது. இதனுல் அங்குள்ள விவசாயிகள் பெரும் அளவுக்குப் பாதிக்கப் பட்டிருக்கிருர்கள். ஆகவே அந்த அணையை உடனடியாகச் சரிப் படுத்த வேண்டிய நடவடிக்கைகளைச் சர்க்கார் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதே சமயத்தில் கவர்னர் தம்முடைய உரையில் சமீபத்தில் ஏற்பட்ட நல்ல மழையின் காரணமாக இவ்வாண்டு விவசாய உற்பத்தி அதிக அளவுக்கு எதிர்பார்க்க முடியும் என்று குறிப்பிட் டிருக்கிருர்கள். நமது அமைச்சர் திரு. கக்கன் அவர்கள் தஞ்சை மாவட்ட சுற்றுப்பிரயாணத்தின்போது பயிர்கள் எல்லாம் சுமார் 2 லட்சம் ஏக்கராவுக்கு மேல் நீருக்குள் மூழ்கிக் கிடந்ததைக்கண்டு இதனுல் உற்பத்தி பாதிக்கப்படும் என்று செய்தி நிருபர்களுக்கு பேட்டி அளித்திருக்கிருர்கள். அப்படி இருக்க இப்போது பெரும் அளவுக்கு உற்பத்தி அதிகமாகும் என்று கவர்னர் எவ்வாறு எதிர் பார்க்கிருர்? இதை அமைச்சர் அவர்கள் திட்டவட்டமாகத் தெளிவுபடுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக நீர்ப்பாசனம் சம்பந்தப்பட்டவரையில் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 27 கோடி ரூபாய் ஒதுக்கி இருந்தாலும், எங்களுடைய மாவட்டத்தில் சுமார் பத்து வருட காலமாக அங்குள்ள பகுதி மக்களுக்கு—வெல்லிங்டன் நீர்த் தேக்கத்திற்கு வேண்டிய அளவுக்கு தண்ணீர் வருவது கிடையாது. அதன் மூலமாகப் பாசனம் செய்யப்படுகின்ற நிலங்களுக்கு ஆயக் கட்டுகள் செய்யப்படாமல் இருக்கின்றன. சர்வே உறுதி செய்யப் படவில்லை. வெள்ள காலத்தில் காவேரி நீர் அதிகமாகக் கடலில் போய்ச் சேருகிறது. அதிக அளவுக்கு காவேரி நீரை மைசூர் சர்க்கார் தடுத்துவிடுகிருர்கள் என்று சொன்னுலும், வெள்ள காலத்தில் அங்கு தண்ணீர் தேவை இல்லை. ஆகவே அதைச் சரியான முறையில் கொண்டு வந்து இங்கே தேக்கிக் கொள்வதற்கு யாருக்கும் எந்த விதமான தடையும் ஏற்படாது என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். மேலும் வெல்லிங்டன் நீர்த் தேக்கத்தில் இருந்து வருகிற வாய்க்கால்களை அகலப்படுத்தி ஒழுங்கு செய்ய பணம் ஒதுக்கித் தரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இப்போது மதுரை மாவட்டத்தில் வைகை நீர்த் தேக்கத்தில் இருந்து வருகிற வாய்க்கால்களை சிமெண்டு பூசி —தண்ணீரை வீணுக்காமல் செய்திருக்கிற ஏற்பாட்டை பரவலாக எல்லா மாவட்டங்களுக்கும் விஸ்தரிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நாம் மத்திய சர்க்காரை 398 கோடி ரூபாய் கேட்டு இருந்ததற்கு மத்திய சர்க்கார் நமக்கு ஒதுக்கியிருக்கிற தொகை 291 கோடிதான். இதிலே வெட்டு விழுந்துள்ள 107 கோடி ரூபாயை மாநில சர்க்கார் ஈடுசெய்து கொள்ளவேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிருர்கள். எந்த அளவில் நமது மாநில சர்க்கார் அந்தத் தொகை இந்த ஐந்தாண்டு

[Sri M. Selvaraj] [21st January 1961

காலத்திற்குள் ஈடு செய்யப் போகிருர்கள்? வரி விதிப்பின் மூலம் ஈடு செய்யப்போகிருர்களா? கடன் மூலமாக ஈடு செய்யப் போகிருர்களா என்று பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நெய்வேலி நிலக்கரித் திட்டத்தை உருவாக்குகிற நேரத்தில் ஏற்கெனவே திட்டமிட்டிருந் தார்கள், 32 லட்சம் டன் எடுக்க வேண்டும் என்று. இப்போது மத்திய சர்க்கார் 45 லட்சம் டன்ருக உயர்த்துவதாகக் குறிப்பிட் டிருக்கிருர்கள். ஆனல் நமது கவர்னர் உரையில் 60 லட்சம் டன்ருக உற்பத்தியாக முடியும் என்று எவ்வாறு தெரிவித்திருக் கிருர்கள் என்று தெரியவில்லை. அதையும் விளக்க வேண்டும். மேலும் இந்தத் திட்டத்தில் கிட்டத்தட்ட பத்தாயிரம் தொழிலாளிகள் வேலை செய்கிருர்கள். ஆனல், அவர்களை தினசரி கூலியாக வைத்துக்கொண்டிருக்கிருர்களேயொழிய இரண்டு, மூன்று ஆண்டு காலமாக தொடர்ந்து வேலை செய்து வந்திருக்கிற போதிலும் அவர்கள் நிலைமை காயப்படுத்தப்படாமல் இருக்கிறது. ஆகவே அவர்களை பர்மனென்ட்டாக செய்வதற்கு வேண்டிய வசதிகளை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இது மத்திய சர்க்காரின் நிர்வாகத்தின்கீழ் இருக்கிறது என்று சொன்ருலும், இதில் தலையிட மாநில சர்க்காருக்கு அதிகாரம் கிடையாது என்று சொன்ருலும் அங்குள்ள தொழிலாளர்கள் நம் மாநிலத்தைச் சேர்ந்தவர்கள், திட்டம் நம் மாநிலத்தில் இருப்பது, ஆகவே அதில் எவ்வித குறைபாடுகளுக்கும் இடமின்றி நடப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதனுல்தான் நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷன் டைரெக்டராக நமது மாநிலத்தைச் சேர்ந்த அமைச்சர்கள் நிர்வாகம் பெற்றிருக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். நமது சர்க்கார் பிரதிநிதி அங்கு ஒருவரும் இல்லாத காரணத்தினல் அங்குள்ள குறைகளை எடுத்துச் சொல்கிற போது அவர்கள் தட்டிக் கழிக்கிருர்கள். ஆகவே நமது அமைச்சர் அவையில் இருந்து யாரையாவது ஒருவரை டைரெக்ட ராகவும் போடுவதற்கு முயலவேண்டும்.

**The Hon. Sri R. VENKATARAMAN:** திட்டம் ஆரம்பித்ததில் இருந்து நமது நிதி இலாகா காரியதரிசியும், தொழில் இலாகா காரியதரிசியும் டைரெக்டராக இருந்து கொண்டிருக்கிருர்கள்.

**Sri M. SELVARAJ:** அதைத் தெரிவித்ததற்கு சந்தோஷம் அடைகிறேன். ஆகவே இந்தக் குறைகளை எல்லாம் உங்கள் காரியதரிசியிடம் தெரிவித்து இவற்றை நீக்குவதற்கு அமைச்சர் அவர்கள் முயலவேண்டும். அதற்கு வேண்டிய நிவாரண வேலைகளை செய்யுமாறு நான் கேட்டுக்கொள்கிறேன்.

அதேபோன்று கடந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலும் நம்முடைய மாநிலத்தில் ரயில் பாதை போடுவதுபற்றி கோரிக்கை புறக்கணிக்கப்பட்டுவிட்டது. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத் திலாவது ரயில்பாதைத் திட்டம் கொடுக்கப்படவேண்டும் என்று

21st January 1961] [Sri M. Selvaraj]

கோரியதன்பேரில்—நமது கவர்னர் தம் உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள. "தென் பிராந்தியத்தில் புதிய இருப்புப் பாதைகள் போடும் திட்டம் பற்றி, ரெயில்வே அமைச்சருக்கு இந்த அரசாங்கம் செய்துகொண்ட வலுவான முறையீட்டின் பயனாகத் தக்க பயன் கிடைக்கலாம் என்று எதிர் பார்க்கிறோம்" என்றுதான் கொடுக்கப்படுகிறது. ஆகவே அதை வற்புறுத்தி பத்திரிகையில் குறிப்பிட்ட நான்கு பாதைகளைத் தவிர வடாற்காடு, தென்னாற்காடு இவற்றை இணைக்கிற சின்னச்சேலம், திருவண்ணாமலை ரயில்பாதையை மூன்றாவது திட்டத்தில் கொண்டுவரவேண்டும் என்று இந்த நேரத்தில் கேட்டுக்கொள்கிறேன்.

குறிப்பாக தென்னாற்காடு மாவட்டம், திருச்சியிலே ஒரு பகுதி —அதுவும் மிகவும் பிற்பட்ட சமூகத்தினர் வாழ்கிற பகுதிகள் குடி தண்ணீர் வசதி என்பதே கிடைப்பது அரிதாக இருக்கிறது. திருச்சி, ஜயங்கொண்டான் முதலிய இடங்களில் குடிதண்ணீர் தேவை என்று தேசீய குடிதண்ணீர் சப்ளை விநியோகத் திட்டத்தின்கீழ் குழாய்க் கிணறுகள் கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்தார்கள். அதே போன்று சிதம்பரம் பகுதியிலே கிராமங்களில் இவ்வசதி செய்வதற்கும் ஏற்பாடு செய்தார்கள். ஆனால் சென்ற ஆண்டு வரையில் எடுத்துக்கொண்ட திட்டங்களைத் தான் நடத்த வேண்டும், இனிமேல் புதுத் திட்டங்கள் எடுத்துக் கொள்ளக்கூடாது என்று மத்திய சர்க்கார் சொல்லியிருப்பதாக நம் சர்க்காரிடம் இருந்து உத்தரவு வந்திருப்பதாகக் கலெக்டர் அவர்கள்—இவ்வாண்டு அந்தத் திட்டத்தை எங்கள் பகுதிக்கு கொண்டுவரவேண்டும் என்று கேட்டுக்கொண்டபோது சொல் கிறார்கள். அப்படியின்றி மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலும் தொடர்ச்சியாக இந்தத் திட்டத்தை எடுத்துக் கொள்வதற்கு வேண்டிய வழி வகைகளை அமைச்சர் அவர்கள் ஏற்படுத்தித் தரவேண்டும் என்று நான் இந்த நேரத்தில் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். பாதை விஸ்தரிக்கும்போது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஊமங்கலம் பிர்க்காவில் காட்டுக்கடன் பகுதியில் கிளைப்பாதைகள் தேவையென்று கலெக்டருக்கும் சர்க்காருக்கும் விண்ணப்பம் செய்திருந்தும் இதுவரை சேர்க்கப் படவில்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இந்தப் பகுதியை சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளு கிறேன்.

மின்சாரத்தைப் பொறுத்தவரையில் தென் ஆற்காடு மாவட் டத்தில் விருதாசலம், கள்ளக்குறிச்சி மிகவும் பிற்பட்ட சமுதாயத் தினர் வாழும் பகுதி. மின்சாரத்தை விஸ்தரிக்கச் செய்யும்போது ஸ்கீம் ரெமுனரேடிவ் ஆக இல்லை என்று ஓரளவுக்கு பல கிராமங்களை விட்டுவிட்டுச் செல்கிறார்கள். ஆகவே பெண்ணாடம் பகுதியில் ஒருசில கிராமங்களுக்கு மின்சார வசதி செய்திருக் கிறார்கள். தொழில் அமைச்சர் அங்கு வந்து பெண்ணாடம் மின்சார திட்டத்தை துவக்கி வைத்தார். அப்போது அதற்கு அருகாமையில் இருக்கும் கிளியமங்கலம், அகரம், வடகரை

[Sri M. Selvaraj] [21st January 1961

போன்ற கிராமங்களுக்கும் இந்தத் திட்டத்தை ஏற்படுத்தித்தர வேண்டும் என்று சொன்னோம். சர்க்கார் கிட்டதட்ட இரண்டு லட்சம் ரூபாய் இதற்காக செலவழிக்கப்படும், சர்க்காருடைய சாங்ஷன்தான் தாமதம் ஆகிறது என்று அதிகாரிகள் சொல்கிறார்கள். இந்தத் திட்டங்களை உடனடியாக எடுத்துக்கொண்டு நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இரண்டு மாதங்களுக்கு முன்பு சர்க்கார் கொண்டுவந்த சம்பள கமிஷன் அறிக்கையில் ஊர் ஆட்சி மன்றங்களில் வேலை செய்யும் உத்தியோகஸ்தர்களுக்கும், நகரசுத்தி தொழிலாளர்களுக்கும் சம்பளம் உயர்வதாக தெரிவித்திருந்தும் இதுவரை எந்த விதமான நடவடிக்கையும் சர்க்கார் எடுத்துக்கொள்ளவில்லை. அவர்களுக்கு சம்பள உயர்வு கொடுக்க வேண்டுமென்றால் அதற்குத் தகுந்த தாக்கீது சர்க்காரிடத்தில் இருந்து வந்தால்தான் கொடுக்க முடியும் என்று சொல்கிறார்கள். இங்கே மேஜர் பஞ்சாயத்தில் வேலை செய்யும் உத்தியோகஸ்தர்களுக்கும், நகரசுத்தி தொழிலாளர்களுக்கும் சம்பள உயர்வு உடனடியாக தருவதற்கு சர்க்கார் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இந்த மாவட்டத்தில் ஆசிரியர்கள் கிடைப்பது அரிதாக இருப்பதால், எஸ்.எஸ்.எல்.ஸி. வரை படித்துத் தேறியவர்கள்—அன்-டிரெயின்ட் டீச்சர்ஸ் இப்பொழுது ஆசிரியர் பள்ளியிலே அமர்த்தியிருக்கிறார்கள். அவர்களுக்கு ட்ரெயினிங் வசதிகளை ஏற்பாடு செய்து, மறுபடியும் தொடர்ச்சியாக அதே பள்ளியில் அமர்த்த வேண்டிய ஏற்பாடுகளை செய்யவேண்டுமென்று என்னுடைய கருத்துரைகளை கூறி முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRI S. RANGANATHA MUDALIAR : Sir, while supporting the motion of thanks to the Governor for his gracious Address, I shall make a few observations in connection therewith.

His Excellency's Address has begun with a pleasant happy refrence to the visit of Her Majesty Queen Elizabeth II of Britain to this country and to our City also. She is visiting us not as overlord of Indian Dominion, not as the Imperial Head of an Empire as her grandfather did about half a century ago. She is coming as the Head of the Commonwealth of Free Nations, of which our country is a member of its own free choice.

His Excellency has rightly described her visit as an event of great significance, a significance which marks the historic change in the relation of our country to Britain. She is regarded as a voluntary symbol of voluntary and free union of independent nations leagued together each for its own good and for the good of all and therefore it is by itself a justification for our jubilance and expectancy as His Excellency remarked. But that is not all. Her humane qualities and her graciousness apart, we are extending our traditional hospitality to her for the reason that our country owes a good deal to our connection with Britain. If our country

21st January 1961] [Sri S. Ranganatha Mudaliar]

is one of the free test democracies in the Asian Continent. if we are building the traditions of popular Governments, and if our outlook and thought are progressively liberal and democratic, it is all due to two centuries of Indo-British connection and the English language further has played a great part in this regard. Our great leaders, like Gopal Krishna Gokhale, Tilak, Mahatma Gandhi, Rabindranath Tagore, Sarojini Devi, Sastry, Satyamuthy, the great Motilal and his greater son, they are all masters of that great language and it is through that language that they led us through a bloodless revolution culminating in our independence. Therefore, it is only proper, to accord a hearty welcome to the royal visitor.

His Excellency's Address is ringing with optimism beginning with a special reference to the improvement of agricultural production in our country and in our State in particular, and glowing upto the end with an account of various projects under the Third Plan. The Address also indicates that though our State is keen on developing its industrial potentiality to its optimum, it has not forgotten, that our economy is mainly agricultural, and therefore our State has set itself to special efforts to increase agricultural production from 52 lakhs of tons to 67½ lakhs of tons.

The growth of agriculture pre-supposes the development of irrigation projects both minor and major and we are told and we are encouraged thereby that under the Third Plan 35 crores of rupees have been set apart for the improvement.

A pride of place has been given to the development of power and our State has become the premier State in this regard. With an allocation of Rs. 101 crores and with the completion of the schemes like Mettur Tunnel Scheme and the Kundah Scheme electrification of the entire State will soon become an accomplished fact. After exhausting the power resources of the State, we are looking forward to the establishment of an Atomic Power Plant for our State. The outstanding feature of the spread of electric power in our State has been its extension to the rural areas. In this respect our State has beaten the record of Bombay and Mysore. Even our sister State of Andhra has not been able to keep pace with us so far as rural electrification is concerned. When we talk of electricity we feel bound to express our sense of gratitude to the great service which the Electricity Department has done for us, at whose head we have a person of the stature of our Chief Engineer, whose dynamism, drive and initiative have been unparallelled.

His Excellency the Governor's address disclosed several great projects each of which is great by itself. Some of them are in the course of implementation. Some are in the course of investigation. But the State is very anxious to bring about the completion of all the projects before the end of the Third Plan period. If we take an overall view of these projects and the effects they would produce, there is no doubt that our State will rank very high as an industrial-*cum*-agricultural State. But the address is

[Sri S. Ranganatha Mudaliar] [21st January 1961

unfortunately silent about the concomitant evil of high industrialisation, viz., rapid growth of slums. The slum problem is becoming more and more acute and with the large-scale spread of industrialisation this concomitant evil will grow in equal proportion. Even the Third Plan does not seem to have bestowed that attention to this problem as it deserves. I think the Government would be pleased to take up this question, the tackling of this problem, at Plan level. Piecemeal attempts to solve this problem will not carry us further.

The greatest achievement of this Government has been that it has been able to pursuade the Government of India to include the Tuticorin Harbour Scheme in the Central sector of the Third Plan. If our Government has not taken a strong line of action with the Centre and if the public had not carried on an almost State-wide agitation, probably Tuticorin Harbour Scheme would have been taken up only sometime in the future. We are glad that Tuticorin Harbour will come to function at least before the end of the Third Plan. Discontent has been expressed by some section of the House that development of other ports has not been taken up. All ports cannot be taken up simultaneously. The hon. Member Sri Selvarajan referred to the story of Satyavan and Savithri and how Savithri through the grace of Yama produced hundred children all at once. We do not know how 100 children could be produced all at once. It will be a great problem for the Revenue Minister if such a thing were to happen and hundred children are born to a woman all at once. Just as it is difficult to produce 100 children all at once, so also it would be difficult to take up the development of all ports all at one and the same time. In the wake of the development of Tuticorin harbour, we are sure that the development of other ports, viz., Sethusamudram, Cuddalore and Pulicat (which was once famous as the shipping centre in the days of Dutch East India Company) would also be taken up in future. We are thankful to the Government for what they have done towards the development of Tuticorin harbour. We have no doubt that the Government will talk up seriously the question of development of the harbours at Sethusamudram and Cuddalore. We can afford to wait for some time to find out whether Government would take up the above schemes also.

Another thing for which we are grateful to Government is the question of compulsory education. We are told that Rs. 32 crores have been set apart for the purpose of compulsory elementary education in the age-group 6 to 11. This has been an age long dream and the dream is coming true. Therefore we can look forward to a period of all-round progress in the State during the next Plan period.

Another important thing which I want to impress upon Government is the need for extension of electrification to all railways in our State. It will be a great day when the railways running in our State are completely electrified. Now there has been great dis-content in our State in regard to the extension of the railway system. Each district wants to have some railway link

21st January 1961] [Sri S. Ranganatha Mudaliar]

**with Madras or Bangalore or other important places. It will be difficult for Government to make the choice and to do the thing. It has become a problem. With the increase of power and with the availability of electrical energy and its availability in larger degree, it is possible for the State of Madras to impress upon the Centre and to compel them to electrify the entire railway system in our State.**

With these words, I thank you, Sir, and close my speech.

* **Sri P. G. MANICKAM** : மதிப்பிற்குரிய தாற்காலிக தலைவர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் அவர்கள் உரையை ஆதரித்து இங்கு கொண்டு வரப்பட்டிருக்கும் தீர்மானத்தை ஆதரித்து நான் சில வார்த்தைகள் தெரிவிக்க விரும்புகிறேன். மேன்மை தங்கிய கவர்னர் அவர்கள் உரையில் விவசாயத்திற்கு முக்கியத்துவம் கொடுத்திருப்பது பற்றி நாம் பாராட்ட வேண்டியவர்களாகயிருக்கிறோம். கடந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் 52 லட்சம் டன் அளவில்தான் விவசாய உற்பத்திப் பொருள் பெருகியிருக்கிறது. மேலும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே 15½ லட்சம் டன் உணவு உற்பத்தி செய்வதற்காக திட்டமிடப்பட்டிருக்கிறது. நாட்டிற்கு அத்தியாவசியமாக தேவைப்படுவது, குறிப்பாக வறுமை மிகுந்த நம் நாட்டிற்கு முக்கியமாக தேவைப்படுவது உணவுதான். ஆகவே உணவு பற்றாக்குறையை நிவர்த்திப்பதற்காக வேண்டிய அளவு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே தொகை ஒதுக்கியிருப்பதோடுகூட, உயர்ந்த அளவு கிடைப்பதற்கு வேண்டிய முயற்சியும் எடுத்துக் கொண்டால் மட்டுமே இதை சாதிக்க முடியும் என்று மேன்மை தங்கிய கவர்னர் அவர்கள் உரையில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இதை மக்கள் உணர வேண்டும். அதோடுகூட ஆங்காங்கு விவசாயிகளிடையே அதிகப்படியான உற்சாகமும் இருக்க வேண்டும். அதிகாரிகளுக்கும் இதில் உற்சாகம் இருக்க வேண்டும். இதற்காக, நெய்வேலியில் ரசாயன உரத் தொழிற்சாலை, புதுத் தொழிற்சாலைகள் இவைகள் எல்லாம் தொடங்கப்படும், தேவையான உர வகை கிடைக்கப்படுமென்றும் தெரிவிக்கப்பட்டிருப்பது பாராட்டிற்குரியதாகும். ஆனால், தற்போது உரவகைகள் குடியானவர்களுக்கு வழங்கப்படுகிறது. ஆனால் தகுந்த சமயத்தில் அவர்களுக்கு இந்த உர வகைகள் போய் கிடைப்பதில்லை. இந்திய அரசாங்கத்திலிருந்து நமது அரசாங்கத்திற்கு வரப்படுகிற உர வகைகளை மாதந்தோறும் ஆங்காங்கு பிரித்துக் கொடுத்து அனுப்பி விடுகிறார்கள். ஆனால் அவை விவசாயிகளுக்கு போய் சேருகிறதா என்பதை சர்க்கார் கவனிக்கவேண்டும். உர வகைகளைப் பிரித்து அந்தந்த தாலுக்காக்களுக்கு அனுப்பும்போது அந்த தாலுக்காக்களில் அந்த உரவகைகள் எந்த முறையில் செலவழிக்கப்படுகிறது என்பதை சர்க்கார் கவனிக்கவேண்டும். விவசாயிகளுக்கு அவர்கள் எதிர்பார்க்கக் 10–30 a.m.
கூடிய நேரத்தில் விதைகள் உரங்கள் கிடைக்கவேண்டும். சர்க்காரால் கொடுக்கப்படும் உரங்கள் 12 மாதங்களிலும் அவர்களுக்கு தேவையில்லை. அவர்கள் வாங்குகின்ற உரத்தை சேமித்து வைக்கமுடியாத நிலை எற்படுகிறது. அப்போதுதான் அவர்கள்

[Sri P. G. Manickam] [21st January 1961

கள்ள மார்க்கட்டில் விற்க ஆரம்பிக்கிறார்கள். இதுதான் கள்ள மார்க்கட்டுக்கு முக்கியமான ஒரு இடமாக இருக்கிறது. விவசாயிகள் தங்களுக்கு எப்போது உரம் தேவைப்படுகிறதோ அப்போதுதான் தங்களுக்கு கிடைக்கின்ற உரத்தை உபயோகிக்கிறார்கள். அதல்லாமல் மற்ற நேரங்களில் கிடைக்கும் உரத்தை கள்ளமார்க்கட்டில் விற்க முன் வருகிறார்கள். கள்ளமார்க்கட் பெருகுவதற்கு காரணம் இதுதான் என்பதை சர்க்காருக்கு தெரிவித்துக்கொள்கிறேன். ஆகவே சர்க்காரானது இதில் முக்கிய கவனம் செலுத்தி நடவடிக்கை எடுக்கவேண்டும். இப்போது சர்க்காரால் கடன் வசதி செய்து கொடுக்கப்படுகிறது. இம்மாதிரிப் பட்ட கடன் வசதி செய்து கொடுக்கவில்லையென்றாலும் மொத்த மாக கிடைக்கின்ற உரத்தை சேமித்து வைப்பதற்கு எல்லா சொஸைட்டிகளிலும் கிடங்குகள் வசதி இருக்கவேண்டும். பன்னிரண்டு மாதங்களுக்கு சேர்த்து கிடைக்கின்ற கோட்டாவை சேமித்து வைத்து அதற்குரிய நேரத்தில் வழங்குவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். இதற்காக சொஸைட்டிகளுக்கு கடன் வழங்கினாலும் பரவாயில்லை என்று நினைக்கிறேன். இவ்விதம் கிடைக்கின்ற கோட்டாவை சேமித்து தக்க சமயத்தில் விவசாயிகளுக்கு கொடுத்துக் கொண்டிருந்தால் உர வகைகளில் நடந்து கொண்டிருக்கும் கள்ளமார்க்கட் குறையும் என்பதை தாழ்மையோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக மின்சாரத்தைப்பற்றி கவர்னர்பெருமான் அவர்கள் தன்னுடைய உரையில் முக்கியமாக குறிப்பிட்டிருக்கிறார்கள். அதாவது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் திட்ட இறுதிக்குள்ளாக எல்லாக் கிராமங்களுக்கும் மின்சார வசதி கொடுக்கப்படும் என்று தெரிவித்திருப்பதைப்பற்றி நாம் சர்க்காரை பாராட்ட வேண்டியவர்களாக இருக்கிறோம். ஆனால் குறிப்பாக எல்லா கிராமங்களுக்கும் என்று சொல்லும்போது ஹரிஜன சேரிகளை கவனத்தில் வைத்துக்கொள்ளவேண்டும் என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். கடந்த முதலாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலும் ஹரிஜன சேரிகளுக்கு மின்சார வசதி செய்து கொடுப்பதற்காக ஐந்து லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தது. இருந்தும்கூட எல்லா ஹரிஜன கிராமங்களுக்கும் மின்சார வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் இன்னும் எத்தனையோ கிராமங்கள் இன்னும் மின்சார வசதி பெறாமல் இருக்கின்றன. காரணம் ஒதுக்கப்பட்ட தொகை போதவில்லை என்று தெரிய வந்தது. ஆகவே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதிக்குள்ளாக எல்லா கிராமங்களுக்கும் குறிப்பாக அரிஜன மக்கள் வாழும் எல்லா இடங்களுக்கும் மின்சாரம் போட்டு கொடுப்பதற்காக எவ்வளவு தொகை வேண்டும் என்று பார்த்து அவ்வளவு தொகையும் ஒதுக்கவேண்டும் என்று தாழ்மையாக சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். இதற்காக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஹரிஜன சேரிகளுக்கு விளக்குகள் போட ஏழு லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதாக தெரிகிறது. மேலும் எல்லாக்

21st January 1961] [Sri P. G. Manickam]

கிராமங்களிலுமுள்ள ஹரிஜன சேரிகளுக்கு மின்சார வசதி செய்து கொடுக்க வேண்டுமென்றால் அதற்கு எவ்வளவு ரூபாய் ஒதுக்கவேண்டும் என்பதை கணக்கிட்டு மின்சார போர்டு ஒரு ரிப்போர்ட் கொடுத்திருப்பதாகவும் தெரிகிறது. அதன் மூலம் எவ்வளவு ரூபாய் தேவைப்படும் என்பதைக் கணக்கிட்டு அதற்கு போதுமான அளவு தொகை ஒதுக்க வேண்டும் என்று சர்க்காரை நான் தாழ்மையாகக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கல்வியைப்பற்றி மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆறு வயது முதல் பதினொன்று வயது வரையுள்ள எல்லாக் குழந்தைகளுக்கும் கட்டாயக் கல்வி அளிக்கவேண்டும், அதற்கான முறைகளை கொண்டு வரவேண்டும், என்று திட்டமிடப்பட்டிருப்பதானது மிகவும் போற்றுதற்குரியது. இதன் மூலம் சுமார் 30 லட்சம் குழந்தைகள் கல்வி பெற வாய்ப்பு ஏற்படும் என்று நம்புகிறேன். முன்னால் 100-க்கு 10 பேர் அல்லது 12 பேர் என்றிருந்த காலம் மாறி 100-க்கு 100 பேர் படித்தவர்கள் இந்தியர்கள் என்று பெருமைப்பட்டுக்கொள்ளக் கூடிய முறையில் பல திட்டங்களை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் செய்வதற்காக வகுத்திருக்கிறார்கள். இது மிகவும் வரவேற்கக் கூடியதும் பாராட்டக் கூடியதுமான திட்டம் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். இந்தத் திட்டம் குறிப்பாக வெற்றிகரமாக நடைபெற வேண்டுமானால் சர்க்கார் சில முக்கியமான யோசனைகளை கருத்தில் கொள்ளவேண்டுமென்றுக் கேட்டுக்கொள்கிறேன். முக்கியமாக 6 வயது முதல் 11 வயது வரையிலுள்ள சிறுவர்களில் படிக்காதவர்கள் யார் என்பதை சர்க்கார் மனதில் இருத்திக் கொள்ள வேண்டும். இன்றைக்கு எல்லா இனத்தவர்களும் நன்றாக படித்துக் கொண்டிருக்கிறார்கள். இதில் முக்கியமாக யார் குறைவான படிப்பு உள்ளவர்களாக இருக்கிறார்கள் என்று பார்த்தால் ஹரிஜன வகுப்பில் உள்ளவர்கள்தான் படிப்பு குறைவாகவுள்ளவர்களாக இருக்கிறார்கள். படிக்காத குழந்தைகளை எல்லாம் சேர்த்து கணக்கெடுத்துப் பார்த்தால், 100-க்கு 70 சதவிகிதம் ஹரிஜன குழந்தைகள்தான் இருக்கும். அதோடு நமது சென்னை சர்க்கார் நடத்தி வரும் மத்தியான உணவுத் திட்டத்தைப் பார்த்து மற்ற ராஜ்யங்களிலுள்ள சர்க்கார்கள் எல்லாம் புகழ்ந்து கொண்டிருக்கின்றன. ஆகவே இந்தத் திட்டத்தை கட்டாயக் கல்வித் திட்டத்தோடு சேர்த்து ஏழை குழந்தைகள் எல்லாருக்கும் இலவச உணவு கொடுப்பதற்கு வழி செய்யவேண்டும், அதற்கான தொகையும் ஒதுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதற்காக போதிய தொகையை நம்மால் ஒதுக்க முடியவில்லையென்றால், மத்திய சர்க்காரிடமிருந்தும் தொகையை பெறுவதற்கு நமது ராஜ்ய சர்க்கார் முயற்சிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ஹரிஜன குழந்தைகளுக்கு இலவசமாக உடைகள் வழங்குவதற்கான திட்டமானது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்படும் என்று இதற்கு முன்னால்

[Sri P. G. Manickam] [21st January 1961

சட்டசபையில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இதையும் சர்க்கார் கவனத்தில் வைத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். குறிப்பாக ஹரிஜன மக்களுக்கு மிகவும் தேவையாக இருப்பது, உண்ண உணவு, இருக்க இடம், உடுக்க உடை. இவைகள் எல்லா மக்களுக்கும் தேவைதான். பகல் 12 மணி நேரம் உழைத்துவிட்டு இரவு 12 மணி நேரம் களைப்பாற வேண்டுமானால் அவர்களுக்கு என்று தனியாக குடியிருக்க ஒரு இடம் தேவை என்பதை நாம் எல்லோரும் ஒப்புக்கொள்வோம். ஒவ்வொரு ஹரிஜன குடும்பத்திற்கும் ஒவ்வொரு மனைக்கட்டு கொடுப்பதற்கு நமது ராஜ்ய சர்க்கார் முயற்சிக்க வேண்டும். இதற்காக இப்போது வருஷந்தோறும் ஒதுக்கப்படும் தொகை போதாமல் இருக்கிறது. இப்போது வருஷந்தோறும் 5 லட்சம் ரூபாய் நமது பட்ஜெட்டில் ஒதுக்கிக்கொண்டிருக்கிறோம். இது போதாது என்பதை சர்க்கார் கவனத்தில் இருத்திக் கொள்ளவேண்டும். ஒவ்வொரு ஜில்லாவிலும் தங்களுக்கு வீட்டுமனை வேண்டும் என்று கேட்டுக்கொள்ளும் ஹரிஜனங்களுடைய விண்ணப்பங்கள் ஒவ்வொரு கலெக்டர் ஆபீசிலும் ஏராளமாக வந்து கொண்டிருக்கின்றன. சர்க்கார் இதைக் கணக்கெடுத்துப் பார்த்தால் மொத்தமாக எத்தனை மனைக்கட்டுகள் தேவை என்பது தெரியவரும். அந்தக் கணக்கை எடுத்துப்பார்த்து, அதற்கு தேவையான பணத்தை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கும்படிக் கேட்டுக்கொள்கிறேன். இதற்கான தொகை போதவில்லை என்றால் மத்திய சர்க்காரை வற்புறுத்தி கூடுதலான பணத்தைப் பெற வேண்டும் என்றுக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ஹரிஜன மக்களுக்கு முக்கியமாக தேவையானது விவசாய நிலம். நமது ராஜ்யத்தில் அரிஜனங்களுக்கு என்று தனியாக நிலங்கள் ஒதுக்கப்பட்டு தனியாக ஜாபிதா ஒன்று எல்லா ஜில்லாக் கலெக்டர் ஆபீஸ்களிலும் வைக்கப்பட்டிருக்கிறது. இதில் ஏறக்குறைய 50 ஆயிரம் ஏக்கர்கள் இருக்கின்றன. கோயம்புத்தூர் ஜில்லாவில் மட்டும் 3,000 ஏக்கர்கள் இருக்கின்றன. எல்லா ஜில்லாக்களிலும் இம்மாதிரி ஹரிஜனங்களுக்கு என்று தரிசு நிலங்கள் (reserved only for Harijans) ஒதுக்கி அதற்காக தனியாக உத்தரவிட்ட ஜி.ஓ.-வும் இருக்கிறது. ஆனால் அந்த நிலங்களை சரியான முறையில் இன்னும் பல இடங்களில் ஹரிஜனங்களுக்கு கொடுக்கப்படவில்லை. என்னுடைய ஜில்லாவைப் பொறுத்தவரை குறைந்தது 2,000 ஏக்கர் வரை இன்னும் பிரித்துக் கொடுக்கப்படாமல் இருக்கிறது. அதற்கான பட்டாக்களும் இதுவரை கொடுக்கப்படவில்லை. ஆகவே இதில் சர்க்கார் தீவிரமாக கவனம் செலுத்தி பல ஆயிரக்கணக்கான ஹரிஜன குடும்பங்களுக்கு தேவைப்படுகிற நிலங்களை பிரித்துக் கொடுத்து, அதற்கான பட்டாக்களையும் வழங்க வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக இப்போது சப்ளிமெண்டரி பட்ஜெட்டிலே ஹரிஜனங்களான வெட்டியான்கள், தலையாரிகள் இவர்களுக்கு சம்பள உயர்வு கொடுத்திருப்பதற்காக ஹரிஜனங்கள் சார்பாக

21st January 1961] [Sri P. G. Manickam]

நான் சர்க்காரைப் பாராட்டுகின்றேன். இன்றைய தினம் அவர்கள் தான் மிக மிகக் குறைவான சம்பளம் வாங்குகின்ருர்கள். அவர்கள் பார்ட் டைம் ஊழியர்கள் என்று சேர்க்கப்பட்டிருக்கிருர்கள். அவர்கள் பார்ட் டைம் ஊழியர்களே இல்லை. அவர்கள் சில மணி நேரம் சர்க்கார் வேலை செய்து விட்டு பாக்கி நேரத்தில் தங்களுடைய வேலையைச் செய்து கொள்ளலாம் என்று சர்க்கார் நினைக்கின்ருர்கள். அவர்கள் அல்லும் பகலும் வேலை செய்ய வேண்டிய ஊழியர்களாக இருக்கின்ருர்கள். எந்த அதிகாரி போனாலும், என்ன தேவையானாலும், நேரம் காலம் இல்லாமல் எல்லாக் காரியங்களையும் செய்ய வேண்டியவர்களாக இருக்கின்ருர்கள். அதோடு இன்று பஞ்சாயத்து யூனியன்கள் வந்து விட்டன. அதிலும் அவர்கள் முக்கிய பங்கு கொண்டு காரியங்களைச் செய்ய வேண்டியவர்கள். இப்போது சர்க்கார் ஊழியர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளத்தில் மிகமிகக் குறைந்த சம்பளம் வாங்குபவர்கள் கிராம உத்தியோகஸ்தர்களான வெட்டியான்களும் தலையாரிகளும்தான். இப்போது அவர்களுக்குச் சம்பள உயர்வு கொடுத்திருப்பதை நான் பெரிதும் பாராட்டுகின்றேன். அதோடு அவர்களும் வீடுகளின்றி கஷ்டப்படுகிருர்கள். இதற்கு ஒரு திட்டம் வகுத்து வீடு கட்டிக் கொள்வதற்கும், மனைக்கட்டு வாங்கிக்கொள்வதற்கும் உரிய தொகையை ஒதுக்கி அவர்களுக்கு உதவி செய்வதற்கு பிரயாசை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த சந்தர்ப்பம் அளித்ததற்காக தலைவர் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்ளுகின்றேன்.

*Sri S. RAMASAMI THEVAR: கனம் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையின்மீது நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகின்றேன். கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையில் இதுவரையிலும் நமது சர்க்கார் சாதித்தவற்றையும் இனிமேல் சாதிக்கப் போவதைப் பற்றியும் விரிவாகச் சொல்லியிருக்கின்ருர்கள். ஆனாலும் நாட்டிலே நிலைமை எப்படி இருக்கின்றது, நிர்வாகம் எப்படி நடக்கின்றது, சரியான முறையில் உள்ளனவா என்பன போன்ற விஷயங்கள் குறிப்பிடப்படவில்லை. அப்படி எடுத்துக்கொண்டு பார்க்கும் போது இன்று சாதாரண விவசாயி, நடுத்தர விவசாயி, ஏழை விவசாயித் தொழிலாளி போன்றவர்களின் நிலை எப்படி இருக்கின்றது, சென்ற 10 ஆண்டுகளாக அவர்களுடைய நிலை உயர்ந்திருக்கின்றதா, அவர்கள் சுபிட்சம் கண்டிருக்கிருர்களா என்பதை நாம் சற்று கவனிக்கவேண்டும். இன்று எங்கு பார்த்தாலும் வரி பாக்கி நிறைந்திருக்கின்றது. கோடிக்கணக்கான ரூபாய் அளவுக்கு வரி கட்ட முடியாமல் பாக்கி இருந்து வருகின்றது. கடன் படாத விவசாயியே கிடையாது. கடன் பளுவைத் தாங்க முடியாது இன்று விவசாயிகள் அலதிப்படுகின்ருர்கள்.

(MR. Speaker in the Chair.)

[Sri S. Ramasami Thevar] [21st January 1961

அது போதாதற்கு நாட்டிலே வரி வசூல் கொடுமை இன்று ஒரு பெரிய பரபரப்பை உண்டாக்கியிருக்கிறது. நாட்டிலே வரியானது நல்ல முறையில் வசூலிக்கப்படவில்லை. இன்று வரி வேட்டையாடுகின்றார்கள் என்று தான் சொல்ல வேண்டியிருக்கின்றது. இன்று மக்கள் மிருகங்களைப் போல் வேட்டையாடப்படுகின்றார்கள். இதற்கு உதாரணமாக எனது அறந்தாங்கி பகுதியிலேயும், பட்டுக்கோட்டை பகுதியிலேயும் உள்ள நிலைமையைப் பற்றி சொல்ல விரும்புகின்றேன். இரு பகுதிகளிலேயும் கிட்டத்தட்ட 100-க்கு 90 பங்கு இனும் ஜமீன் கிராமங்களாக இருந்தன. இந்தக் கிராமங்கள் 1961-ம் பசலியிலிருந்து சர்க்கார் வசப்பட்ட பின் அங்கு சரியான முறையில் வரி வசூலிக்கப்படவில்லை. கணக்கு வழக்கு இல்லை. கிராமங்கள் சர்க்கார் வசப்படுத்தப்பட்ட பின் ஜில்லாவில் உயர்ந்த பட்ச வரி, தாலுக்காவில் உயர்ந்த பட்ச வரி என்று வரிகள் விதிக்கப்பட்டன. இதைக் கண்டு மக்கள் அஞ்சி உயர் நீதிமன்றத்திற்கு ரிட் செய்தார்கள். தீர்ப்பிலே அடுத்த பக்கத்து கிராமத்தில் என்ன வரி வசூலிக்கப்படுகின்றதோ அதே சமமான வரிதான் விதிக்கப்பட வேண்டும் என்று கொடுக்கப்பட்டது. அந்தத் தீர்ப்பு உதாசினம் செய்யப்பட்டுள்ளது. நாங்கள் உயர்ந்த பட்சம் வாங்கி விட்டோம், அதே தான் வாங்குவோம் என்று சொல்லப்பட்டது. பின் இந்த மாதிரி கொடுமைகளினாலும், மக்களுடைய எதிர்ப்பினாலும் சில ஆண்டுகளிலே வரி வசூலிக்காமலேயே வரி வசூல் தடைப்பட்டது. பின்பு 1952-ம் ஆண்டிலே புயல் அடித்தது. 1955-ம் ஆண்டிலே வேறு ஒரு கோரப் புயல் வீசியது. இதன் காரணமாக இந்த இரண்டு ஆண்டுகளிலேயும் வரி வசூலிப்பதிலே தடை ஏற்பட்டது. 1956-ம் ஆண்டில் தேர்தலுக்காக அந்த ஆண்டில் வரி வசூலிப்பதில் சர்க்கார் கவனம் செலுத்தவில்லை. பிறகு செட்டில்மெண்ட் ஆவதற்கு பல ஆண்டுகள் ஆயிற்று. இரண்டாவது கணக்கு வழக்கு இல்லை. எவ்வளவு தான் வரி வசூலிப்பது என்று தெரியாது பல காரணங்களினால் வரி வசூல் தடைப்பட்டது. சிலரிடம் அதிக வரியும் வாங்கியிருக்கின்றார்கள். சென்ற இரண்டு, மூன்று ஆண்டுகளாக பஞ்சம் ஏற்பட்டதினாலே மக்கள் சரியானபடி வரி கொடுக்க முடியவில்லை. சர்க்காரும் இது பற்றி கவனிக்கவில்லை. 10 ஆண்டுகளாக அவர்களும் நித்திரையில் இருந்து விட்டார்கள். இப்போது பார்க்கும் போது கோடிக்கணக்கான ரூபாய் பாக்கி நிற்கின்றது. உடனடியாக வசூலிக்கும்படி உத்திரவு பிறப்பிக்கப்படுகின்றது. ரெவின்யு போர்ட் உடனே கீழேயுள்ள அதிகாரிகளுக்கு உத்திரவு போடுகின்றது. கீழேயுள்ள அதிகாரிகள் ஏனைய சில்லரை அதிகாரிகளைத் தூண்டி மக்கள் கொடுமைப்படுத்தப்படுகின்றார்கள். இதைப்பற்றி நான் சென்ற கூட்டத்திலேயே கூட முறையிட்டேன். எனது தொகுதி மக்கள் வரி கட்டாது இருக்க விரும்பவில்லை. கஷ்டம் தாங்க முடியவில்லை, வரியை தவணை தவணையாகக் கட்டுவோம் என்று கேட்டார்களேயொழிய வரியை தள்ளுபடி செய்ய வேண்டுமென்று கேட்கவில்லை. சர்க்காருடைய கடமையைக் கொடுக்கக் காத்துக்கொண்டிருக்கின்றார்கள். அப்படி இருந்தும் கூட அங்கு நடந்திருக்கக்கூடிய கொடுமைகளில் சிலவற்றை

21st January 1961] [Sri S. Ramasami Thevar]

எடுத்துச் சொல்ல விரும்புகின்றேன். ஒரே ஒரு வட்டத்தில் சென்ற 3 ஆண்டுகளுக்குள்ளாக இதுவரையில் 17,000 ரூபாய் வரையில் கையாடல் செய்யப்பட்டிருக்கின்றது. அதுவும் ரசீதுகளைக் கொண்டு வந்து பரிசீலனை செய்த பிறகு கண்டுபிடிக்கப்பட்டது. இன்னும் பல ரசீதுகளை மக்கள் கொண்டு வந்து காட்டும்போது, சில ரூபாய்களை வரியாக வசூலிக்கலாம் என்று, ரசீதை பரிசீலனை செய்ய வேண்டுமானால் ஐந்து அல்லது பத்து ரூபாய்கள் வரி கட்டுங்கள் என்று அதிகாரிகள் கேட்டதனால் இன்னும் சிலர் கட்டாமல் இருக்கின்றார்கள். இன்னும் நன்றாகப் பரிசிலனை செய்து பார்த்தால் 20,000 அல்லது 30,000 ரூபாய் வரையில் கையாடல் செய்திருப்பதாகக் காணலாம். ஒரே வட்டத்தில் மூன்று ஆண்டுகளில் இவ்வளவு கையாடல் நடந்திருக்கிறது என்றால் இதைப்பற்றி நான் அதிகம் சொல்ல வேண்டியதில்லை. 100-க்கு 60 வட்டங்களில் இம்மாதிரி கையாடல் செய்யப்பட்டுள்ளது. இந்தக் குறை யாரைச் சார்ந்தது. இந்த சர்க்காரையும் இந்த மன்றத்தையும் சார்ந்தது என்று கூற விரும்புகின்றேன். எத்தனை லட்சக்கணக்கான ரூபாய்கள் விவசாய மக்களிடமிருந்து ஏமாற்றப்பட்டுள்ளது. ரசீது இருந்தும்கூட வரி வசூலிக்கப்படுகின்றது. மக்கள் கொடுமை படுத்தப்படுகின்றார்கள். கணக்கு வழக்கு கிடையாது.

கணக்கு வழக்கு என்பதே கிடையாது. நாங்கள் வரியைக் கொடுக்கிறோம். எங்களுக்கு கணக்கு வேண்டுமென்று கேட்டால் ரெவின்யு இன்ஸ்பெக்டரைக் கேளுங்கள் என்பார்கள். அவரைக் கேட்டால் தாசில்தாரைக் கேளுங்கள் என்பார். தாசில்தாரைக் கேட்டால் கணக்குப் பிள்ளையைக் கேளுங்கள் என்று கூறுவார். வரி செலுத்தும் ஒரு விவசாயி எந்த நேரத்திலே கணக்கு கேட்டாலும், உடனடியாக காட்டுவதுதான் தர்மமாக இருக்க வேண்டும். மக்களை ஏமாற்றி, கசக்கிப் பிழிந்து, மிருகம்போல் பார்க்கப்படுகிறார்கள். இந்தக் கொடுமையைப் போக்க வேண்டுமென்று இந்த மந்திரி சபையை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். இது மாத்திரமல்ல. இதுபோன்று ஒவ்வொரு இடங்களிலும் காணப்படுகிறது. இது 10 வருஷமாக சேர்ந்து அடித்த கூட்டுக்கொள்ளை என்றே நான் சொல்ல விரும்புகிறேன். அதிகாரிகள் சரியாக நடந்திருந்தால், எந்தவிதமான கையாடலும் வந்திருக்காது. இன்று ரசீது புத்தகங்களிலே அடிகட்டுத்தான் இருக்கிறது. ஒவ்வொரு ரசீது புத்தகமும் முடிந்த பிற்பாடும், அந்த ரசீது புத்தகத்தைப் பார்த்து பரிசீலனை செய்திருந்தால் இந்தக் கையாடல் வந்திருக்காது. கஜானாவில் கணக்குகளை சரிவர சோதித்துப் பார்ப்பார்களேயானால், எங்கும் இந்தக் கையாடல் நேர்ந்திருக்காது என்பதை நான் சொல்ல விரும்புகிறேன்.

இன்று அதுவும் இல்லை. என்னுடைய பகுதியிலே ஒருவர் ஒரு ரசீது வைத்திருக்கிறார். அதாவது லோன் பாக்கி எதுவும் இல்லாமல் பூராத் தொகையும் கட்டி தீர்த்து விட்டதாக அதிலே குறிப்பிட்டு இருக்கிறது. அப்படியிருந்தும் அதே ரசீது

எண்ணைக் குறிப்பிட்டு லோன் பாக்கி என்று அவருடைய ஆடு, மாடுகளை ஜப்தி செய்தார்கள். அதேபோல் ஒரே ஒரு ஜோடி உழவு மாடு வைத்திருந்தவருடைய உழவு மாட்டையும் ஜப்தி செய்தார்கள். என்னுடைய பகுதியிலே இருக்கக்கூடியவர்கள் அதிகமாக புஞ்சை சாகுபடி செய்யக்கூடிய மக்கள். இந்த சமயத்தில் மிளகாய் மற்றும் இதர சாகுபடிக்கு தண்ணீர் பாய்ச்ச உதவ மாடுகள் மிகவும் அவசியம். இந்த மாதிரி சமயங்களில் மாடுகளை ஜப்தி செய்து மக்களை கஷ்டப்படுத்துகிறார்கள். இது பற்றி மேல் அதிகாரிகளிடம் தெரிவித்தால், அந்தச் சமயத்தில் சலுகை காட்டுவதுபோல் சொல்கிறார்கள். ஆனால் மறுதினம் ஏவி மக்களை இம்சை செய்கிறார்கள். கிராம அதிகாரி கையாடல் செய்து இருப்பது தெரிந்தும்கூட, கண்டிப்பது கிடையாது. அவர்களை ஒன்றும் செய்வது கிடையாது. ஏதோ மயிலே, மயிலே இறகு போடு என்று கேட்பது போல், கையாடல் செய்த பணத்தை கொடுத்து விடுங்கள், மீண்டும் வேலைக்கு உங்களை எடுத்துக்கொள்கிறோம் என்று கூறுகிறார்களே ஒழிய, ஒருவித கண்டிப்பும் கிடையாது. ஆகவே இதையெல்லாம் ஆராய்ந்து, இதற்குத் தக்க நடவடிக்கை எடுப்பதற்கு ஒரு விசாரணை கமிட்டியை அனுப்பி, மக்களுடைய கஷ்டத்தை போக்க வேண்டும் என்று நான் மன்றாடி கேட்டுக் கொள்கிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** கனம் அங்கத்தினர் அவர்கள் ஒரு சில இடங்களையும், அதிகாரிகளையும் குறிப்பிட்டு சொன்னால் நடவடிக்கை எடுக்க வசதியாக இருக்கும்.

**SRI S. RAMASAMI THEVAR :** பல தடவை முயற்சி செய்தும், நான் மாத்திரம் அல்ல, பல விவசாயிகளும் . . . .

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இப்போதே சில குறிப்பிட்ட இடங்களையும், பெயர்களையும் எழுதிக் கொடுத்தால் உடனடியாக கவனிக்கவும், நடவடிக்கை எடுக்கவும் வசதியாக இருக்கும்.

**SRI S. RAMASAMI THEVAR :** இதுபற்றி பெரிதும் நான் மகிழ்ச்சி அடைகிறேன். இன்னொரு இடத்திலே ஒரு மதிக்கத் தக்க விவசாயி. அவரிடம் வரி வசூலிப்பதற்காக கணக்குகளைத் தாறுமாறாகக் காட்டிக் கேட்டார்கள். அவர் உடனே நகலை எடுத்துக் கணக்குப் பார்க்கும்போது அதிகமாக அவரே ரூ. 100-க்கு மேல் கொடுத்திருக்கிறார். அப்படியிருந்தும் அவரிடம் ஜப்தி மூலம் வசூல் செய்யப்பட்டிருக்கிறது. இந்த மாதிரியான கொடுமைகள் இனி நேராதபடி, தக்க நடவடிக்கை எடுக்கும் படியாக நான் மக்கள் சார்பாக கேட்டுக்கொள்ளுகிறேன்.

பழைய பாக்கிகள் இன்னும் நிறைய வசூலிக்கப்படாமல் இருக்கின்றன. சிலர் அதிகமாக கொடுத்திருக்கிறார்கள். அப்படி அதிகமாக கொடுத்துள்ளவர்களுக்கு குறைத்தும், நடப்பு பசலிக்கு உள்ளதை மட்டும் வசூல் செய்து கொண்டு, பாக்கிக் கணக்கு உள்ளவர்களுக்கு பிற்பாடு தவணை தவணையாக வசூலிக்

21st January 1961] [Sri S. Ramasami Thevar]

கவும் ஒரு உத்தரவு பிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளு கிறேன். முன்னர் வி. எஸ். ஆர்-ல் சேர்ந்த சில வசதியான நிலங் களில் சிலவற்றை புறம்போக்கு என்று கணக்கு கொடுக்கப்பட் டிருக்கின்றன. அதற்கு வரி செலுத்தப்பட்டிருக்கிறது. பிறகு புறம்போக்கு ஆக்கியபின் முன் செலுத்திய வரி கழிக்கப்பட வில்லை. முன் கூட்டிய தொகையை கணக்கில் வைப்பதில்லை. கணக்கு வைத்து கழித்து பாக்கியைக் கேட்பதும் இல்லை. இவைகளையெல்லாம் நன்கு கவனித்து, தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

விவசாயம் அதிகம் பெருக வேண்டுமென்றும், உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்றும் நாம் கவலை கொண்டி ருக்கக்கூடிய நேரத்தில், அதற்காக பிரசாரம் அதிகம் நடந்து கொண்டு வரும் இக்காலத்தில், அறந்தாங்கி தாலுக்கா உர விநி யோகத்தில் மிகவும் கவனிக்கப்படவில்லை. ஏதோ மாமாங்கத் திற்கு ஒரு தரம், நல்ல மழையை நாம் காண்போம். இந்த வருஷத்திலே முன் மழை பெய்யாவிட்டாலும்கூட, பிற்பகுதியில் நல்ல மழை பெய்திருக்கிறது. அப்படி பெய்திருந்தும், வேண்டிய உரங்கள் காலா காலத்தில் வருவது கிடையாது. இந்த வகையில் அறந்தாங்கி புறக்கணிக்கப்பட்டது என்பதை வருத்தத்தோடு சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

கவர்னர் பெருமான் உரையிலே சிறிய நீர்ப்பாசன வசதிக்கு ஒதுக்கப்பட்டுள்ள தொகை போதவே போதாது என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நம் நாட்டிலே இப்போது எல்லா நீர் நிலைகளுக்கும் ஜீவ நதிகளுக்கும் அணைக்கட்டு கட்டி யாகிவிட்டது. இனிமேல் ஒன்றுமில்லை என்று சொல்லப்பட்டு வருகிறது. அப்படியிருந்தும், சிறிய நீர்ப்பாசன வசதிக்கு அதிகத் தொகைகள் ஒதுக்கப்படவில்லை. இனி சிறிய நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கினால் அன்றி, நாம் விவசாயத்தை முன்னுக்கு கொண்டுவர முடியாது. கடலிலே போய் வீணாகக் கலக்கும் காட்டாறுகளைத் தடுத்து அணைகட்டி விவசாயத்தைப் பெருக்க முடியுமென்று நான் பலமுறை சொல்லி வந்தேன். அறந்தாங்கி தாலுக்காவிலே அப்படிப்பட்ட அணைகள் பல கட்ட முடியு மென்று நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். இதுவரையிலே பல ஆண்டுகளாக சொல்லி வந்ததின் பேரில், இப்போது ஒரே ஒரு அணை கட்டி, அது முடிவடைய இருக்கிறது. இன்னும் இதுபோல் பல அணைக்கட்டுகளைக் கட்டித் தரும்படி கேட்டுக் கொள்கிறேன்.

அதிலேகூட இப்போது கட்டப்படும் அணைக்கு கருங்காட்டு அணை என்று பெயர். அந்த அணையின் பெயரை மாற்றுவதற்கு பலர் முயன்று வந்தார்கள். அப்படி முயற்சி செய்து, அதை புவளூர் அணை என்று மாற்றியிருக்கிறார்கள். அதோடுகூட அங்குள்ள மக்களிடையே கருங்காட்டு அணையிலிருந்து, கருங் காட்டு ஏரிக்குத் தண்ணீர் பாயாது என்ற பீதியையும் கிளப்பி இருக்கிறார்கள்.

[21st January 1961

THE HON. SRI P. KAKKAN : அணைக்கு நானே நேரில் போய் வந்திருக்கிறேன். பெயர் மாற்றம் ஒன்றும் செய்யப்படவில்லை. சும்மா யார் சொல்வதையோ, அங்கத்தினர் கேட்டு, சொல்வதாக நினைக்கிறேன்.

SRI S. RAMASAMI THEVAR : பெயர் கருங்காட்டு அணை என்று இருந்தாலும்கூட, அங்குள்ள அஸ்திவாரக் கல்லிலேயே புவலூர் அணை என்று பொறிக்கப்பட்டிருக்கிறது என்பதை கனம் மந்திரி அவர்களுக்கு சொல்வதோடு, கருங்காட்டு அணையிலிருந்து கருங்காட்டு ஏரிக்கு தண்ணீர் வராது என்ற பிதி மக்களுக்கு ஏற்படாதபடி கனம் அமைச்சர் அவர்கள் நேரில் வந்து அங்குள்ள மக்களுக்கு உறுதி கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அணைக்கட்டிலிருந்து ஏரிக்குத் தண்ணீர் வரும் என்று இப்போதே நான் இங்கு தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI S. RAMASAMI THEVAR : அதுபற்றி பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன்; திருப்தி அடைகிறேன். இதுபற்றி மந்திரி அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

11.00 a.m. அடுத்தபடியாக, மின்சாரத்தைப்பற்றி பெரிதும் பேசப்படுகிறது. நமது மாநிலத்தில் மின்சாரம் அதிகமான கிராமங்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது என்பது பற்றி நாம் மகிழ்ச்சி அடைகிறோம். ஆனால், எனது அரந்தாங்கி தாலுக்காவில் கிராமப் பகுதியில் இன்னும் மின்சாரம் கொடுக்கப்படவில்லை என்பதை நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஆவுடையார் கோவில், சுப்பிரமணியபுரம், அரசர்குளம், ஆயங்குடி ஆகிய கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கப்பட்டால், அங்குள்ள விவசாயம் வளர்ச்சி அடைந்து, உணவு உற்பத்தி பெருகும் என்று நான் திட்டவட்டமாகச் சொல்ல முடியும்.

பல தொழில்கள் நாட்டில் ஏற்படுத்தப்போவதாக நாம் அறிகிறோம். இருந்தும்கூட, இந்த நாட்டிலே என்ன நடக்கிறது என்றால், மழை பெய்து எங்கு வளம் பொருந்தியிருக்கிறதோ, எங்கு வசதிகள் இருக்கிறதோ, அந்தப் பகுதிகளில் தொழிற்சாலைகள் அமைக்கப்படுகிறதே ஒழிய, பிற்போக்கான இடங்களில் அமைக்கப்படுவதில்லை. பிற்போக்கான இடங்களில் வேலையில்லாமல் மக்கள் தவிக்கும் பகுதிகளிலே, விவசாயத்திற்காக வருடத்திலே 4, 5 மாதங்கள் வேலை செய்து, பின்னால் சும்மா இருக்கக்கூடிய வரண்ட பிரதேசங்களிலே, பெரிய தொழிற்சாலைகளை அமைத்தால், அங்குள்ள மக்களுக்கு அதிக வேலை வாய்ப்பு கிடைக்கும், வருவாயும் கிடைக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஆகவே, எனது பகுதியில் ஒரு தொழிற்சாலை ஏற்படுத்த சர்க்கார் முன்வர வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

21st January 1961] [Sri S. Ramasami Thevar]

சர்க்காரில் நடந்து வரும் கொடுமையைக் கண்டு, சர்க்காரிடம் இனி கடன் வாங்கக்கூடாது என்ற நிலைமை மக்களுக்கு ஏற்பட்டிருக்கிறது.

மேட்டூர் அணை ஆரம்பித்த காலத்தில் தஞ்சாவூருக்கு நிறைய தண்ணீர் விடுவது என்று ஒரு ஒப்பந்தம் இருந்தது. அந்த வாய்க்காலும் புதுக்கோட்டை வழியாக வந்து அறந்தாங்கி வழியாகத் தான் செல்ல வேண்டும். இருந்தும் அந்த சமயத்தில் புதுக்கோட்டை குறுக்கே நின்ற காரணத்தினால் எனது பகுதிக்கு தண்ணீர் வராமல் தடுக்கப்பட்டு விட்டது. இதுபற்றி கனம் முதல் அமைச்சர் அவர்களிடமும், மற்றவர்களிடமும் பல தடவைகள் நாங்கள் சொல்லியிருந்தும்கூட, இன்னும் அந்த விஷயம் கவனிக்கப்படவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். மேட்டூர் அணையிலிருந்து மற்ற பகுதிகளுக்கு தண்ணீர் கொண்டு போகப்படுவதை நாங்கள் தடுக்கவில்லை. அப்படியிருந்தாலும்கூட எங்கள் பகுதிக்கு வரவேண்டிய தண்ணீர் அவசியம் தரப்படவேண்டும் என்று சொல்லிக் கொண்டு, இத்துடன் என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* SRI T. R. RAMAMIRTHA THONDAMAN: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த சட்டமன்றத்தில் கவர்னர் பெருமான் உரையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நம் நாடு சுதந்திரம் அடைந்த பிறகு, விடுதலை அடைந்த நாட்டிற்கு இந்த நாட்டை அடிமைப்படுத்தி வைத்திருந்த அதே நாட்டினுடைய ராணியார் நம் விருந்தினராக வருவதை கவர்னர் பெருமான் வரவேற்றிருப்பதை பாராட்டுகிறேன்.

சமீபத்தில் பெருமழையின் காரணமாக பாதிக்கப்பட்ட தஞ்சை ஜில்லா மிகவும் அலங்கோலமான நிலையில் பாதிக்கப்பட்டிருக்கிறது. அந்த மழையின் காரணமாக ஏராளமான வீடுகள் இடிந்து நாசப்படுத்தப்பட்டிருக்கின்றன. இரண்டாம் போகம் தாளடி, முதல் போகம் சம்பா சாகுபடி இவை அனைத்தும் வெள்ளத்தினால் அடித்துக் கொண்டு போகப்பட்டன. நிவாரண வேலைகள் துவங்கி விரை முதலியவைகள் கிடைத்தும், லோன்கள் கொடுக்கப்பட்டிருந்தும், அதிலிருந்து உழவர்கள் எதிர்பார்த்தபடி பூரண பலன் கிடைக்குமா என்றால், நிச்சயமாக எதிர்பார்ப்பதற்கு மாறாக மூன்றில் ஒரு பங்குதான் பலன் கிடைக்கும் என்று சொல்ல வேண்டியிருக்கிறது. முதல் போகம் சம்பா சாகுபடியில் புகையான் என்ற ஒருவித பூச்சி அடித்து, பயிர் கதிருக்கு வெளியிலே வரும் சமயத்தில் நாசப்படுத்தப்பட்டுவிட்டது. அந்த வைக்கோலைக்கூட உழவர்கள் உபயோகப்படுத்தக்கூடாது என்று விவசாய அதிகாரிகள் தெரிவிக்கும் நிலையில் சாகுபடி அத்தனையும் நாசப்படுத்தப்பட்டு, உழவர்கள் நிலை மிகவும் கவலைக்கிடமாயிருக்கிறது. உழவர்கள் வீடுவாசல்கள், மாடு கன்றுகள் எல்லாவற்றையும் அநேகம் பேர்கள் இழந்து பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். பாதிக்கப்

[Sri T. R. Ramamirtha Thondaman] [21st January 1961

பட்ட பகுதிகளுக்கு நிவாரணம் அளிக்கப்பட்டு வருகிறது என்று கவர்னர் அவர்களின் உரையில் தெரிவிக்கப்பட்டிருந்தபோதிலும், நிவாரணம் என்பது ஒரு சில பகுதிகளுக்கு மட்டும், மோசமாக பாதிக்கப்பட்ட பகுதிகளுக்கு மட்டும் அளிக்கப்படுகிறது என்ற நிலை இருக்கிறது. நிவாரணம் அளிப்பதென்றால் பாதிக்கப்பட்ட எல்லாப் பகுதிகளுக்கும் நிவாரணம் அளிக்கப்படவேண்டும். பாதிக்கப்பட்ட பகுதிகளில் வீடு இழந்தவர்கள் பற்றி கிராம அதிகாரிகள் லிஸ்டுகள் எடுத்துக்கொண்டு போனார்கள். ஆனால், நிவாரணம் கொடுக்கும்போது, ஒரு சிலருக்கு கொடுத்து, மற்றும் சிலருக்கு இல்லை என்றால், சர்க்கார் கொடுப்பார்கள் என்று மற்றவர்களும் உதவி செய்வதை நிறுத்திவிடுகிறார்கள், பாதிக்கப் பட்டவர்களும் முயற்சி எடுத்து செய்து கொள்ளுவதற்கு முன் வருவதில்லை. இம்மாதிரி ஒரு சங்கடமான நிலைமை ஏற்படுத்தப் படுகிறது. கொடுப்பது குறைவாக இருந்தாலும், நிரந்தரமாக எல்லோருக்கும் நிவாரணம் கிடைக்கும்படி கொடுப்பது நலம் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். அம்மாதிரி கொடுக்கும் பட்க்ஷத்தில் பெருமளவு மக்கள் வேதனை அடைந்திருப்பதை காண வருந்துகிறேன்.

என்னுடைய ஜில்லா நிலச்சுவான்தார்கள், பண்டார சன்னதிகள், தேவஸ்தானங்கள் சூழப்பட்ட ஜில்லா. இம்மாதிரி உழவர்கள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கக்கூடிய நிலைமையில், சர்க்கார் மூலம், கூட்டுறவு சொஸைடிகளின் மூலம் கடன் வாங்கி, வெளியிலும் கடன் வாங்கி, விரை முதலியவைகளையும் கடன் வாங்கி, இவ்வளவு கடன் வாங்கி சாகுபடி செய்தும், சாகுபடி செய்த பலன் கைக்கு எட்டாத நிலைமையில் போய்விட்டது. வாங்கிய கடனை இந்த ஆண்டு திருப்பிக் கொடுக்க வேண்டும் என்ற ஒரு பொறுப்பு ஒருபுறம் இருக்க, நிலச் சுவான்தார்கள், மடாதிபதிகள், தேவஸ்தானங்கள் தங்கள் குத்தகையை உடனடி யாக அளக்கவேண்டும், வாரத்தை உடனடியாக பிரித்துக் கொடுக்கவேண்டும் என்று நிர்ப்பந்தம் செய்யக்கூடிய தொல்லை யான நிலைமை இருக்கிறது. விவசாயிக்கு தனக்கு கிடைக்கக்கூடிய பலன் கிடைக்காவிட்டாலும், வாங்கிய கடனை திருப்பிக் கொடுக்க வேண்டும் என்ற சங்கடமான நிலையில் தவிக்கும்பொழுது, நிலச் சுவான்தாரர்கள் அவர்களுடைய குத்தகையை அளக்கவேண்டும் என்று நிர்ப்பந்தப்படுத்துகிறார்கள். அதன்காரணமாக விவசாயி நிலத்தை விட்டு வெளியேற்றப்படுகிற நிலைமை ஏற்பட்டு, கடனை திருப்பிக்கொடுக்க முடியாததோடு மேலும் கடன் தொல்லைக்கு ஆளாக்கப்படுகிறான். இதனால் ரிமிஷன் கோரி கோர்ட்டுக்குப் போய் பரிகாரம் தேடவேண்டும். ஒரு ஏக்கர் விவசாயம் செய்யும் விவசாயி ரெமிஷனுக்காக கோர்ட்டுக்குப் போவது என்றால், அதற்கு வக்கீல் வைக்கவேண்டியிருக்கிறது. முன்போல் இல்லாமல் இந்தக் காலத்தில் வக்கீல் பீஸ் அதிகமாக கொடுக்க வேண்டிய நிலைமை இருக்கிறது. இம்மாதிரி அதிகமாக வக்கீல் பீஸ் கொடுத்து வக்கீலை அமர்த்தி கோர்ட்டில் நிவாரணம் கிடைப்ப தென்றால், அதற்கு பல 'யீரங்கிகள்' ஆகின்றன. நிவாரணம் கிடைப்பதற்கு ஏறக்குறைய ஒன்பது மாதங்கள் ஆகிவிடுகிறது.

21st January 1961] [Sri T. R. Ramamirtha Thondaman]

இதனுல் அவன் எதிர்பார்க்கும் சலுகையைவிட மூன்று மடங்கு செலவு அதிகமாகிறது. இந்த நிலையில் விவசாயி உழைத்த உழைப்பிற்கு பலன் கிட்டுமா என்பது நிச்சயம் இல்லை. தனக்கு நிவாரணம் ஒன்றும் கிடைக்கவேண்டாம், ஆளை விட்டால் போதும் என்ற நிலை இருக்கும்பொழுது, கோர்ட்டில் பரிகாரம் தேடுவது முடியாத காரியம். ஆகவே கோர்ட்டு மூலமாக பரிகாரம் தேடுவதற்கு பதிலாக பாதிக்கப்பட்ட பகுதிகளில் அங்கு இருக்கக்கூடிய ஸ்தல அதிகாரிகள், டெப்யூடி தாசில்தார், தாசில்தார், பிளாக் டெவலப்மெண்டு அதிகாரிகள் கிராமப் பகுதிகளுக்குச் சென்று, சேதம் அடைந்த பகுதிகளை பார்வையிட்டு, அங்கு இருக்கக்கூடிய நிலைமையை நேரில் அறிந்து, என்ன நிவாரணம் எந்த முறையில் அளித்தால் செளகரியமாக இருக்கும் என்பதை உணர்ந்து உழவர்களுக்கு கஷ்டமில்லாமலும், நஷ்டமில்லாமலும் உடனடியாக செய்யவேண்டும். அங்குள்ள நிலச்சுவான்தார்கள், தேவஸ்தானங்கள் ஆகியோர்களிடம் சிக்கிக்கொண்டு உழவர்கள் அவதிப்படாமல் உழவர்களைக் காப்பாற்ற முதல் நடவடிக்கையாக சர்க்கார் இந்த நடவடிக்கையை எடுக்கவேண்டுமென்றும் அவர்கட்கு சர்க்கார் ஸொஸைட்டி மூலமும், பிளாக் மூலமும் கொடுத்திருக்கும் கடன்களை தள்ளுபடி செய்யவேண்டும் என்றும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, தீவிர உணவு உற்பத்தி திட்டம் எங்கள் ஜில்லாவில் அமுல் நடத்தப்படுகிறது. உணவு உற்பத்தியை அதிகப்படுத்தவேண்டும் என்பதையும், 52 லட்சம் டன்னிலிருந்து மேலும் 15-½ லட்சம் டன் உணவு உற்பத்தியை அதிகப்படுத்த வேண்டும், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் என்ற நோக்கம் சர்க்காருக்கு இருக்கிறது என்பதையும் கவர்னர் பெருமான் உரையில் தெளிவுபடுத்தியிருக்கிருர்கள். தீவிர உணவு உற்பத்தி திட்டம் அமுலாகிற பகுதி எங்கள் பகுதி. கிராமாந்திரப் பகுதிகளில் கிராம கூட்டுறவு சங்கங்களை அமைத்து, அந்த கூட்டுறவு சங்கங்களின் மூலம்தான் விவசாயிகளுக்கு உரம், மற்றைய பணம், விரை இதர வசதிகள் அனைத்தையும் நாம் கொடுக்கவேண்டியிருக்கிறது. விவசாயிகள் தங்களுக்கு லோன் வேண்டும் என்று போகும்பொழுது, கூட்டுறவு சங்கத்தின் அங்கத்தினர் பங்குத் தொகையை செலுத்தி அங்கத்தினர்களாக சேர்ந்து விடுகிருர்கள் என்ருலும், ஜமீன்தார் பக்கத்திலேயே வேண்டியிருக்கிறது. இதில் ஏருள சிக்கல் இருக்கின்றது. சொஸைட்டியில் பணம் வாங்குவதைவிட வெளியில் அனியாய வட்டிக்கு பணம் வாங்குவது மேல் என்று உழவர்கள் கருதுகிற அளவுக்கு அங்குள்ள கூட்டுறவு மத்திய பேங்கும் அதன் நிர்வாகஸ்தர்களும் இருக்கிருர்கள். காரணம் ஒருவர் 100 ரூபாய் கடன் வாங்குகிருர் என்ருல், அந்தத் தொகைக்கு ஜாமீன் போடுகிறவருக்காக 100 ரூபாய்க்குள்ள பங்குத் தொகையைக் கடன் வாங்குபவர் கொடுத்தால்தான் கடன் கொடுக்கப்படுமென்ற நிலைமை கூட்டுறவு மத்திய பாங்கியில் இருந்து வருகிறது. சாகுபடி செய்வதில் அதிகக் கஷ்டம் இருக்கிறது என்ற காரணத்தால் ஒரு விவசாயி வெளியில்

[Sri T. R. Ramamirtha Thondaman] [21st January 1961

கடன் வாங்கும்பொழுது, 100 ரூபாய்க்கு ஒரு வட்டி விகிதம் வாங்கவேண்டிய நிலையைத் தவிர்க்க, 100-க்கு 6¼ வட்டிக்குக் கடன் கொடுக்கும் கிராம கூட்டுறவு சொசைடி மூலம் கடன் வாங்கி நல்ல முறையில் சாகுபடி செய்யலாமென்று நினைத்துச் செல்லுகிற பொழுது, அவனுடைய பங்குத் தொகையைச் செலுத்துவது, அவனுடைய ஜமீன்தாருடைய பங்குத்தொகையைச் செலுத்துவது, மத்திய பாங்குக்கு பல தடவைகள் சொஸைட்டி தலைவர் சென்று அலைவது போன்ற நிலை ஏற்படுகிறது. ஆகவே, கூடுமானவரையில் உழவர்களை அதிகம் பழி வாங்காமல், எல்லா சிலவுகளும் உட்பட 100-க்கு முக்கால் வட்டிக்கு மேற்படாமல் மட்டுப்படுத்தி, இந்த சொசைடிகளிலிருந்து லோன் கொடுக்கும் வாய்ப்பை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கூட்டுறவு மத்திய பாங்கியிலிருந்து கிராம கூட்டுறவு நாணய சங்கங்களுக்கும், கூட்டுறவு கிராம இதர சங்கங்களுக்கும் லோன் கொடுப்பதற்குப் பதிலாக, ரிசர்வ் பாங்கியிலிருந்து சர்க்கார் கஜானா மூலமாக நேரடியாக கிராம கூட்டுறவு சங்கங்களுக்கு பணம் அனுப்பிவிடுமேயானால், விவசாயிகள் அலைவதைத் தடுத்து சீக்கிரமாகவும், சுலபமாகவும் கடன் பெறமுடியும். இதை ரிஸர்வ் பேங் கவர்னர் அவர்களிடம் நானும், கிராம தலைவர்களும் தெரிவித்திருக்கிறோம், காரணம் கூட்டுறவு மத்திய பாங்கியில் இருப்பவர்கள் அத்தனை பேரும் பெரிய நிலச்சுவான்தார்கள். ஆனால் கூட்டுறவு கிராம சங்கங்களை வைத்து அதிலிருந்து பயனடைய வேண்டுமென்று நினைப்பவர்கள் ஏழை உழவர்கள். அந்த மத்திய பேங்கிலிருந்து உதவி பெற்று, தங்களுடைய பொருளாதார நிலையை உயர்த்துவதற்கும், உற்சாகமாக உழைப்பதாலும், அதே நேரத்தில் உணவு உற்பத்தியைப் பெருக்கவேண்டுமென்று அவர்கள் நினைக்கும் காலத்தில் அதற்கு மாறாக உழவர்கள் வாழ்வதில் அதிர்ப்தி உடைய மத்திய பேங்கு நிர்வாகத்தில் மாறான எண்ணங்கள் ஏற்படுகின்றன. அதன் காரணமாகவே நாம் போட்ட திட்டங்கள் வெற்றி பெறுவதில் தாமதம் ஏற்படுகிறது. உணவு உற்பத்தி குறைகிறது, உழவர்கள் உழைப்பு வீணாகிறது. அந்த தாமதத்தைப் போக்கவேண்டுமென்றுதான் நான் சர்க்காரிடம் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

தீவிர உணவு உற்பத்தி திட்டம் சம்பந்தமாக, என்னுடைய ஜில்லாவைப் பொறுத்தவரையில் இன்னொரு விஷயத்தைச் சொல்ல ஆசைப்படுகிறேன். சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களைப்பற்றி நான் பல தடவைகள் இந்த சபையில் எடுத்துச் சொல்லியிருக்கிறேன். குறிப்பாக மண்ணியாறு பாசனத்தை பற்றிக் கடுமையாக தெரிவித்திருக்கிறேன். சிறிய நீர்ப்பாசனத் திட்டத்தின்கீழ் ஆறுகளிலிருந்து பிரிந்து செல்லக்கூடிய வாய்க்கால்கள், அந்த வாய்க்கால் தலைப்பிலிருந்து பிரிந்து செல்லக்கூடிய சிறிய வடிக்கால்கள் இருக்கின்றன. பல கிராமங்களுக்கு அதுவும் பல கோணல் மாணலாக பல வளைவுகளுடன் ஒரு வாய்க்கால் தலைப்பு இருக்கிறது. இந்த வாய்க்கால் கண் வெட்டுவது, வாய்க்கால் மராமத்து செய்வது குடிமராமத்து திட்டத்தின்கீழ் ஆற்றில் வாய்க்கால் தலைப்பிலிருந்து செய்யவேண்டிய எல்லா மராமத்து

21st January 1961] [Sri T. R. Ramamirtha Thondaman]

சம்பந்தமான வாய்க்கால் வடிக்கால் கரை மோடு வாய்க்கால் வெட்டு வேலைகளையும் ஒவ்வொரு கிராமத்தாரும் செய்து கொள்ள வேண்டிய நிலையில் இருந்தது. இதை நில சுவான்தார்கள் செலவில் செய்து வந்தார்கள். ஆனால் சமீபத்தில் நிறைவேற்றப் பட்ட பாதுகாப்புச் சட்டம், நியாயவாரச் சட்டம் இவைகளில் இருக்கக்கூடிய அமைப்புப்படி, நிலசுவான்தார்தான் அந்த வாய்க் கால் மராமத்து வேலையைச் செய்யவேண்டுமென்று இருந்தும் கூட, உழவர்களுடைய நிலம் விளையாமல் இருப்பதற்கு வாய்க் கால்களைத் தூர்ப்பதுதான் நல்லது என்ற ஒரு கருத்து நில முதலாளிகளுக்கு ஏற்பட்டுள்ளது. சட்டப்படி நிலச்சுவான் தார்தான் வெட்ட வேண்டியது என்று உழவர்கள் ஒதுங்கி விடுகிறார்கள். நமக்கு ஏற்பட்ட குத்தகைப்படி வந்தால் போதும், அதிகம் விளைந்தால் நமக்கு என்ன, இந்த வாய்க்காலை நாம் ஏன் வெட்டவேண்டுமென்று நிலச்சுவான்தார் ஒதுங்கிவிடுகிறார். இதனால் வாய்க்கால்கள் தூர்ந்து மேடிட்டு, பாசன வடிகால் வசதிகள் சரியில்லாமல் போய்விட்டது. குடிமராமத்துச் சட்டத் தின் பெயரில் இருக்கக்கூடிய கிராம வாய்க்கால்களை தீவிர உணவு உற்பத்தித் திட்டத்தின்கீழ் மராமத்துக்களை சர்க்கார் செலவில் கொண்டுவரவேண்டும். நிறைய எருக்களைப் போட்டு நிலத்திலிருந்து அதிக கண்டு முதலை எதிர்பார்க்கும் நேரத்தில், பாசன வடிக்கால் வசதியில்லாவிடில் பயனில்லை. ஆகவே இரண் டாம் நம்பர் வாய்க்கால் என்று சொல்லக்கூடிய (பெரிய) வாய்க் கால்களை நீர்ப்பாசன இலாகா எடுத்துக்கொண்டு மாரமத்து செய்வது போல, அந்தந்த கிராமப் பகுதிகளிலுள்ள கிராம வாய்கால்களையும் நீர்ப்பாசன இலாகா முதலில் எடுத்து செப்ப னிட வேண்டும். ஒவ்வொரு கிராமத்திற்கு தனி வாய்கால் பாசனம் செய்து புதிய தலைப்புகள் ஏற்படுத்த வேண்டும். அதற்காக ஒரு ஸ்பெஷல் திட்டம் போட்டு, ஸ்பெஷல் கிராண்டு ஒதுக்கி சிறிய நீர்ப்பாசனச் திட்டங்களைச் செய்யலாம். (இந்த பாசன வடிக் கால் வேலையை) முதலில் நீர்ப்பாசன இலாகா வேலை செய்த பிறகு, அந்தந்த ஆண்டு செப்பனிட வேண்டிய வருஷ மராமத்து பொறுப்பை பஞ்சாயத்து யூனியன்களிடம் ஒப்படைக்க வேண்டும். அதற்கான தொகையை ஒதுக்கி இதை உடனடியாக செய்தால்தான் உற்பத்தி அதிகரிக்க முடியும். தீவிர உணவு உற்பத்தித் திட்டத்தின்கீழ் உழவர்களுக்கு நாம் கொடுத்திருக்கிற பல வசதிகளையும் செய்து கொடுப்பதோடு, பாசன வடிகால் வசதிகளையும் செய்து விட்டால் நாம் எதிர்பார்க்கக்கூடிய 15½ லட்சம் டன்னுக்கு மேலாக உற்பத்தியை அதிகரிக்க முடியும். ஆகவே சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்காக ஒரு ஸ்பெஷல் திட் டத்தைத் தயாரித்து, முதலில் நீர்ப்பாசன இலாகா மராமத்து வேலையைச் செய்து முடித்த பிறகு, பஞ்சாயத்து யூனியன்கள் மூலம் அதற்குப் பிறகு செப்பனிடும் வேலையைச் செய்வதற்கு ஒரு வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்வ தோடு உழவர்கட்கு நிலத்தில் நிரந்தர உரிமையும் அளிக்கப்பட வேண்டும்.

[Sri T. R. Ramamirtha Thondaman] [21st January 1961

அடுத்தபடியாக, ஜில்லாக்களில் ரோடுகளைப் பாராமரிப்பது, பள்ளிக்கூடம் கட்டுவது, ஆஸ்பத்திரிகள் கட்டுவது போன்ற ஸ்தல அபிவிருத்தி வேலைகளை ஜில்லா போர்டுகளிலிருந்து கால் பங்கு பெற்றும், பஞ்சாயத்திலிருந்தும் மக்களிடமிருந்தும் கால் பங்கு பெற்றும், வேலைகளைச் செய்து வந்தோம். சென்ற பத்தாண்டு காலமாக ஜில்லா போர்டுகள் எந்த ரோடுகளையும் சரிவர வேலை செய்யவில்லை, ஸ்தல அபிவிருத்தி வேலைகளும் செய்யப்படுவதில்லை. கிராம ரோடுகள் பாராமரிப்புக்காக 100, 200 ரூ. என்று தொகை ஒதுக்குவது, அது எங்கேயோ போவது என்ற நிலையில்தான் ரோடுகள் காட்சி அளிக்கின்றன. இப்பொழுது பெய்த பெருமழையின் காரணமாக பல இடங்களில் எல்லா ரோடுகளிலும் போக்குவரத்து ஸ்தம்பித்துவிட்ட நிலையைக் காண்கிறோம். பஞ்சாயத்துக்களும், பஞ்சாயத்து யூனியன் களும், இப்பொழுது இருக்கக்கூடிய நிதி நிலைமை மிகவும் கவலைக்கிடமாக இருக்கிறது. பஞ்சாயத்து யூனியன் பஞ்சாயத்து நிதி, பள்ளிக்கூட ஆசிரியர்கள் சம்பளம், டாக்டர்களுடைய சம்பளம், ஆஸ்பத்திரிகள் மருந்து மற்றும் ஸ்தல அபிவிருத்தி வேலைக்காக நியமிக்கப்பட்டிருக்கும் அதிகாரிகளின் சம்பளத்திற்கே போதுமா, போதாதா என்ற நிலையிலிருக்கிறது. இந்த நிதியை வைத்துக்கொண்டு பெரிய ரோடுகளையும், மற்ற வேலைகளையும் செய்வது அசாத்தியமான காரியம். ஆகவே, ஸ்பெஷலாக சர்க்கார் நிதி ஒதுக்கி, ஸ்தல அபிவிருத்தித் திட்டங்களைச் செய்யவேண்டும். ஜில்லா போர்டு தன்னுடைய பங்கு தொகையை நிறுத்தி விட்டதால், சர்க்காரே அந்தப் பங்கு தொகையை பஞ்சாயத்து யூனியன் மூலமாகக் கொடுத்து, ஸ்தல அபிவிருத்தி வேலைகள் நடப்பதற்கான ஒரு சூழ்நிலையை அங்கு ஏற்படுத்தி கிராம ரோடுகள், பள்ளிகள், இதர பொது வேலைகளை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் கிராம பஞ்சாயத்துகளுக்கு அதிக அதிகாரங்களை கொடுக்க வேண்டும். மயானமும் களமும்தான் இப்பொழுது கொடுக்கப்பட்டிருக்கிறது.

என் பகுதியில் எங்கே பார்த்தாலும் தேவஸ்தானங்களும், மடாலயங்களும் இருக்கின்றன. என் தொகுதியில் ஹைஸ்கூல்கள் ஆரம்பித்து, மற்றும் காலேஜ் ஒன்று ஆரம்பிப்பது போன்ற முயற்சிகள் எங்கள் பகுதியில் பல வருஷ காலமாகவே இருந்து வருகிறது. கனம் விவசாய அமைச்சர் அவர்கள் வந்திருந்த போதுகூட ஆடுதுறையில் ஒரு விவசாயக் கல்லூரியை ஆரம்பிக்க வேண்டுமென்று கேட்டபொழுது, விவசாயக் கல்லூரிக்குப் பொருத்தமான இடம் இது. இதில் இருந்து விவசாயத்திற்கு பல முன்னேற்றமான காரியங்களைச் செய்து கொள்ள முடிகிறது என்று அமைச்சர்கள் மட்டுமல்ல, அந்நிய நாட்டுப் பார்வையாளர்களும்கூட ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். காரணம் ஆடுதுறையில் விவசாய பண்ணை நல்ல முறையில் நடப்பதுதான். விவசாயக் கல்லூரி அங்கு ஆரம்பிப்பதற்கு 80 அல்லது 100 ஏக்கர் நிலம் வேண்டும், 5 லட்சம் அல்லது 10 லட்சம் ரூபாய் வேண்டும், இவைகளைக் கொடுத்தால் ஆரம்பிப்போம் என்று சர்க்கார் சொன்னால், அதைக் கொடுக்கக் கூடியவர்கள் யார்?

21st January 1961] [Sri T. R. Ramamirtha Thondaman]

நிலம் பூராவும், மடம், கோவில் நிலங்கள், பணமும் அவர்களிடம் தான் இருக்கிறது. மடாலயங்களில் அடிமைகளாக இருக்கும் குடிகள் நிலம் தொகை கொடுப்பதற்குப் போதிய வசதியுள்ளவர் களாக இல்லை. ஆகவே மடாலய கோவில்தான் இவைகளை கொடுக்க வேண்டும். பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் திட்டத் திற்கு 25 சதவிகிதம் பங்கு தொகையை மேஜர் பஞ்சாயத்துக்கள் கொடுக்க வேண்டும் என்று சர்க்கார் கேட்கிறது. ஆடுதுறை, திருவிடைமருதூர் பஞ்சாயத்துக்களுக்கு பங்கு தொகை கொடுப்பதற்குப் பணம் இல்லை. அங்கேயுள்ள மக்களுக்கும் கொடுக்க சக்தியில்லை. இதனல் இது கிராமங்களிலே தண்ணீர் திட்டம் நிறைவேறியும் இங்கு நடக்கவில்லை. குறிப்பாக பண்டைய காலத்தில் சோழ மன்னனுக்குப் பைத்தியம் பிடித்து, திருவிடைமருதூர் மகாலிங்க சுவாமி தேவஸ்தானத் துக்கு வந்தவுடன் பைத்தியம் தெளிந்துவிட்டது என்ற காரணத்தால் மேற்படி மன்னனல் கட்டப்பட்ட கோவிலுக்கு ஏராளமான ஜனங்களும், நூற்றுக்கணக்கான பைத்தியங்களும் இக்கோவிலின் பிரகாரத்தைச் சுற்றினல் பைத்தியம் தெளிந்து விடும் என்ற எண்ணம் ஏற்பட்டிருக்கக்கூடிய தேவஸ்தானம் இருக்கிற இடத்தில் குடிதண்ணீர் வசதியில்லை. அங்கு குடி தண்ணீர் வசதிக்காக பஞ்சாயத்துத் தீர்மானம் மோசமாயும், திட்டத்திற்குரிய பங்குத் தொகை கொடுப்பதற்கு அங்கே ஆட்கள் இல்லை. பஞ்சாயத்திலும் பணம் இல்லை. அங்குள்ள பண்டார சன்னதிகள் சாதாரணமாக கொடுக்க மாட்டார்கள். தப்பித்தவறி சிறு தொகை கொடுப்பது என்று ஒப்புக் கொண்டால், நமது இந்துமத போர்டு எல்லா ஜனங்களுக்கும் குடிப்பதற்கான ஒரு தண்ணீர் திட்டத்திற்கு வேண்டிய பங்கு தொகையைக் கொடுக்க தேவஸ்தான போர்டார் மறுத்து விடுகிறார்கள். காரணம் இந்து மத போர்டு விதிகளில் காட்டியிருப்பதாக சொல்லுகிறார்கள். இதுபோன்ற திட்டங் களுக்கு எந்தவிதமான தடையும் சொல்லாமல், அபிவிருத்தி வேலைகள் நடப்பதற்கு, அதாவது, ஹைஸ்கூல், காலேஜ், பள்ளிக் கூடங்கள், ஆஸ்பத்திரி போன்றவைகளுக்கு அதற்குரிய பங்கு தொகையை தேவஸ்தானங்களும், மடாலயங்களும் கொடுக்க வேண்டுமென்ற ஒரு சூழ் நிலையை ஏற்படுத்தவேண்டுமென்றும் அதற்குரிய முறையில் இந்துமத சட்டத்தை மாற்றவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன், காரணம் திருவிடைமருதூர் வாசிகள் கேட்டதற்கிணங்க திருவிடைமருதூர் பண்டார சன்னதி அவர்கள் திருவிடமருதூர் தண்ணீர் திட்டத்திற்காக பத்தாயிரம் ரூபாய் கொடுக்க சம்மதம் சொல்லியும் அப்படி கொடுக்க வேண்டுமென்று சிபாரிசு செய்த (பத்தாயிரம்) பணத்தை எண்டோமெண்ட் போர்டில், கோவில் பணத்தைக் கொடுக்கக் கூடாது என்று சொல்லிவிட்டார்கள். சாமிக்குக் கர்ணமல் சாமி

பட்டினிக் கிடக்கும்போது பணத்தைக் கொடுக்கவேண்டும் என்று சொல்லவில்லை சாமிக்கு கண்டது போக, தாராளமாய் செலவிட்டது போக, மீதியிருக்கும் பணத்திலிருந்து ரிசர்வ் நிதி யிலிருந்து 3, 4 அல்லது 5 லட்சம் என்றிருக்கிறதே அதிலிருந்து

கொடுக்கச் சொல்லுகிறோம். அப்படியிருந்தும் கொடுக்கவில்லை. அதை உடனே கொடுக்கச் செய்யவேண்டும். ஆடுதுறையில் ஒரு காலேஜ் வைக்க ஸ்ரீலஸ்ரீ அருள் நந்தி சுவாமிகள் மானிய நிதி கொடுத்துதவ முன்வந்திருக்கிறார்கள். திருப்பனந்தாளில் ஹைஸ்கூல் ஏற்படுத்த மானிய நிதியும் இதர உதவியும் செய்து இருக்கிறார்கள். 5 லட்சம் அளித்திருக்கும் திருப்பனந்தாள் சந்நி தானத்தைப் பாராட்டுகிறேன், அப்படி பள்ளியும், காலேஜும் ஆரம்பிக்க உடனடியாக சர்க்கார் அங்கிகாரம் கொடுத்து, அதற் குரிய மற்ற வசதிகள் மற்றைய மடங்களால் கிடைக்கும்படி செய்து மேலும் தரும ஆதீனம் திருப்பனந்தாள் ஹைஸ்கூலுக்கு தரும ஆதீனம் கொடுக்கும் வசதிகளையும் அங்கிகரித்து அவற்றை ஏற்படுத்த வேண்டும் என்று வலியுறுத்திச் சொல்ல ஆசைப்படுகிறேன். என் பகுதியில் தேவஸ்தானங் களால் கிடைப்பதை உடன் அங்கீகரிக்கவும் அமைச்சர் உத்தரவிட கேட்டுக்கொள்ளுகிறேன். மேலும் பந்தநல்லூர், சோழபுரம் இவைகளில் ஹைஸ்கூலுக்கு போடப்பட்ட மனுபடி இந்த ஆண்டு ஹைஸ்கூல்கள் ஏற்படுத்த கேட்டுக்கொண்டு முடிக்கிறேன். வணக்கம்.

**Sri T. M. NALLASAMI :** கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமானின் உரையை வரவேற்றுப் பேச சந்தர்ப்பம் கொடுத்ததற்காக நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அப்படி வரவேற்றுப்பேசும்போது, என் கருத்துக்களையும் சொல்ல ஆவல். உள்ளவனாக இருக்கின்றேன். கவர்னர் பெருமான் நிகழ்த்திய உரை பெரும்பாலும், பிளானிங் கமிஷனால் அங்கிகரிக் கப்பட்டிருக்கிற மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றி, அதில் உள்ள முக்கிய அம்சங்களை எடுத்துச் சொல்லும் முறையில் அமைந்திருக்கிறது. அந்த நாட்டிலே சிறிய, பெரிய தொழில்களை வளர்க்கும் நோக்கத்தோடு, பெரிய அளவில் தொகைகள் ஒதுக்கப்பட்டிருப்பது பாராட்டத் தக்கது. இருந்தாலும், நீர்ப் பாசன சம்மந்தமாக பெரிய அளவு வெட்டு இருப்பதாக உணர்த் தப்படுகிறது.

இன்றைக்கு விவசாயம்தான் நாட்டின் முதுகெலும்பு என்று பாரதப் பிரதமர் முதல் எல்லோரும் கூறுகிறார்கள், விளம்பரப் படுத்துகிறார்கள். ஆனால் நீர்ப்பாசனம்தான் விவசாயத்திற்கு இன்றியமையாதது. அதைக் கருத்தில் கொண்டுதான் எங்கு பார்த்தாலும் நீர் நீர் என்றும்,

"நீரின்றி அமையாது உலகெனின் யார் யாருக்கு
வானின்றி அமையாது ஒழுக்கு"

என்ற அடிப்படையில் நாட்டுக்கு நாடு பேச்சு வார்த்தைகள் நடைபெறுகின்றன. இந்தியாவுக்கும், பாகிஸ்தானுக்கும், தண்ணீர் சம்மந்தமாக தகராறு இருந்து, தீர்ந்ததைச் செய்தித்

தாள்களில் படித்துக்கொண்டு இருந்தோம். இன்றைக்கு, மைசூருக்கும் அண்டை மாகாணத்திற்கும் தகராறு பற்றிப் பத்திரிகையில் பார்க்கிறோம். இப்படி நீர்பாசனத்திற்கு அவசியம் இருக்கும் காரணத்தினால்தான், உள்நாட்டிலுள்ள வசதிகளைப் பெருக்கிக் கொள்ளும் நோக்கத்தோடு, சென்னை சர்க்கார் ஸ்பெஷல் மைனர் இர்ரிகேஷன் ப்ரோக்ராம் என்று ஒரு தனி இலாகாவையே ஏற்படுத்தி நாட்டிலுள்ள வளங்களை, சிறிய, பெரிய ஓடைகளை, ஏரிகளை, நதிகளைப் பயன் படுத்திக்கொள்ள திட்டமிட்டார்கள். நதிகள் என்று சொல்லும்போது, காவேரி நீங்கலாக இதர நதிகள். இவற்றை ஆராய்ச்சி செய்து சிறந்த திட்டங்களைத் தயாரித்து, மூன்றுவது திட்ட நகலில் சேர்த்தார்கள். பல திட்டங்கள் திட்ட கமிஷனால் அங்கீகரிக்கப் படாமல், அது குறைவு பட்டு இருக்கிறது. அப்படிப் பல திட்டங்கள் பரிசீலிக்கப்பட்டு, ப்ளான்கள், எஸ்டிமேட்டுகள் கூட, தயாரித்து மூன்றுவது திட்ட நகலில் சேர்த்தார்கள். சர்க்கார் விளம்பரங்களிலெல்லாம் அம்மாதிரித் திட்டங்கள் எல்லாம் வரும் என்று சொல்லப்பட்டது. சில மாதங்களுக்கு முன்னால்கூட நினைவிருக்கிறது, கனம் பி. ஜி. மாணிக்கம் ஒரு கேள்வி கேட்டார்கள், ஜில்லா வாரியாக மூன்றுவது திட்டத்தில் சேர்க்கப் படும் நீர்ப்பாசனத் திட்டங்களைப்பற்றி. கனம் மராமத்து மந்திரியவர்கள் ஒரு தாளை அச்சிட்டு சமர்ப்பித்தார்கள். அதில் இன்னின்ன திட்டம், இன்னின்ன திட்டத்திற்கு இன்னின்ன தொகை என்றெல்லாம் விளக்கப்பட்டிருந்தது. நிபுணர்கள் தீவிரமாக பரிசீலனை செய்த காலத்திலும், அங்கத்தினர்கள்—நகரப் பகுதி அங்கத்தினர்கள் தவிர, மற்ற அங்கத்தினர்கள்—எல்லோரும் இந்தத் திட்டங்களெல்லாம் நிச்சயமாக நிறைவேறும் என்று நம்பினார்கள். ஆனால், இன்று அந்தத் திட்டங்களில் பல கைவிடப்படவேண்டிய நிலை இருக்கிறது; தொகையும் குறைந்திருக்கிறது. சுமார் ரூ. 27 கோடி நீர்பாசனத்திற்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று கவர்னர் உரையில் சொல்லப் பட்டிருக்கிறது. பரம்பிக்குளம் திட்டத்திற்கே ரூ. 25 கோடி வரை பிடிக்கும். ஆகவே, மற்றெல்லாத் திட்டங்களும் கைவிடப் படலாம் என்றுதான் ஊகிக்கிறோம். பரம்பிக்குளம் திட்டம் நிறைவேற வேண்டும்தான், அதில் மின்சார திட்டமும் இருப்பதால் அது நாட்டுக்கு மிகவும் நல்லதாக இருக்கும். ஆனால் இந்த மத்தியதரத் திட்டங்கள் நிறைவேறவில்லை என்பது வருத்தத்தைக் கொடுக்கும் விஷயமாக இருக்கிறது. ஆனால், கவர்னர் அவர்களின் உரையில், நம் ப்ளானில் "கட்" இருந்தாலும்,

"Going by our experience of the Second Plan, we may yet hope to restore some of these cuts as we proceed on with the implementation." என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆகவே, இந்த சந்தர்ப்பத்திலே இந்த திட்டங்களும் நிறைவேற்றப் படவேண்டும் என்று வற்புறுத்த விரும்புகிறேன். இம்மாதிரி திட்ட கமிஷனின் அங்கிகாரம் இல்லாமல், திட்டங்கள் வெட்டப்பட்டிருக்கின்றன என்று தெரிந்தவுடனேயே, முதல் அமைச்சர், விவசாய அமைச்சர், நிதி மந்திரி, மராமத்து மந்திரி இவர்களை நானும், இன்னும்

[Sri T. M. Nallsamy] [21st January 1961

என்னைப் போல ஆவல் உள்ள பல அங்கத்தினர்களும் கேட்டோம். அவர்களும், நேஷனல் டெவலெப்மெண்ட் கவுன்சிலில் பெரிய அளவு வற்புறுத்தியிருக்கிறார்கள்; அதன் பேரில் திட்ட கமிஷனின் சம்பந்தத்தின் மேல் ஒரு அட் ஹாக் கமிட்டியை போட்டிருக்கிறார்கள். ஒதுக்கப்பட்ட திட்டங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்வதே அந்த கமிட்டியின் நோக்கம். நம் நிதி அமைச்சரும் அதில் அங்கத்தினராக இடம் பெற்று இருக்கிறார்கள். அது மகிழ்ச்சிக்கு உரிய விஷயம். நிதியமைச்சர் இல்லாமல், மற்ற அமைச்சர் இருந்திருந்தால் மகிழ்ச்சி இல்லையா என்றால், பரம்பிக்குளம் திட்டம், அவர்கள் பகுதியில் இருக்கிறது, அதனால், அவர்கள் தொகுதி வளப்படும். ஆகவே, அந்த திட்டம் வருவதில் அவர்களுக்கு எப்படி சந்தோஷமும், மகிழ்ச்சியும் இருக்குமோ, அப்படியே தான் மற்ற திட்டங்கள் வந்தால், அந்த அந்த தொகுதி அங்கத்தினர்களுக்கும் மகிழ்ச்சியும் சந்தோஷமும் என்று அவர்கள் நன்றாக உணர்வார்கள் என்ற காரணத்தினால் நான் அப்படிச் சொன்னேன். ஆகவே, அவர்களே இந்த கைவிடுவதாக உள்ள திட்டங்களின் அவசியத்தைப் பற்றி என்.டி.சி. இல் வற்புறுத்திச் சொல்ல அங்கத்தினர்கள் குறைகளை மனதில் கொண்டு, எடுத்துச் சொல்ல வசதியாக

11–30 a.m. இருக்கும் என்பதை வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். மற்ற இலாகாக்களிலே ஏதாவது கஷ்டம் இருக்குமானால்கூடப் பாதகம் இல்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட விரைவிலே நாம் கேட்டிருப்பது 40 கோடி ரூபாய் அல்லது ஒன்றிரண்டு கோடி அதிகமிருக்கும் என்று நினைக்கிறேன். அதில் 13 அல்லது 14 கோடி ரூபாய் குறைத்திருக்கிறார்கள். நீர்ப்பாசனத் திட்டங்களை பொறுத்தவரையில் வெட்டு இல்லாமல் வேறு எந்த இலாகாவில் வெட்டு இருந்தாலும் பரவாயில்லை. எப்படியிருந்தாலும் திட்டமிட்டபடி நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றிவிட வேண்டுமென்பது என்னுடைய விருப்பமாகும். நான் என் பகுதியைப் பொறுத்து மட்டும் இதைச் சொல்லவில்லை. எனக்காகவும், மற்ற பிரதிநிதிகளுக்காகவும் தான் இதைச் சொல்கிறேன். திட்டங்கள் வரும் வரும் என்று ஆவலாக இருக்கும் பொது மக்களின் சார்பாகவும் நான் கேட்டுக்கொள்கின்றேன். இந்தத் திட்டங்கள் ஸ்பெஷல் மைனர் இர்ரிகேஷன் ப்ரோக்ராமில் போடப்பட்டு, ஓரளவு மேலெழுந்த வாரியாக ஆராய்ச்சி செய்யப்பட்டு, ஸ்பெஷல் டிவிஷன் ஏற்படுத்தி தீவிரமாகப் பரிசீலிக்கப்பட்டு, மக்கள் எதிர்பார்த்துக்கொண்டு இருக்கக்கூடிய நிலையை அடைந்திருக்கின்றன. நொய்யல் நதித் திட்டத்திற்காக ஸ்பெஷல் டிவிஷன் ஒன்று ஏற்படுத்தினார்கள். ஒரு அசிஸ்டெண்ட் இன்ஜினீரும், பல செக்ஷன் ஆபிசர்களைப் போட்டு, அணை இன்ன உயரம் இருக்கும், தண்ணீர் தேங்கும் விஸ்தீரணம் எவ்வளவு, இத்தனை ஆயிரம் ஏக்கருக்குத் தண்ணீர் பாயும், இந்த இந்த இடத்தில் வாய்க்கால் செல்லும் என்றெல்லாம் திட்டமிடப்பட்டது அங்குள்ள மக்களெல்லோருக்கும் தெரியும். சென்ற ஒரு மாதத்திற்கு முன்புவரை என்னிடம் ஏராளமான 'விஜிட்டர்கள்' வந்து, "எங்கள் பகுதிக்கு வாய்க்கால் வரவில்லை, தெற்கே வருகிறது, மேற்கே வரவில்லை" என்ற வகையில் சொல்லிக்கொண்டு

இருந்தார்கள் என்றால் எவ்வளவு தூரம் மக்கள் ஆவலாக இருக்கிறார்கள் என்பதைக் கவனித்து உணர வேண்டும். இவ்வாறு ஆவலாக மக்கள் இருக்கும்போது 'இந்தத் திட்டம் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக் கொள்ளப்படாது' என்று சொல்லும்போது அங்கே ஒரே அதிர்ச்சியும் குழப்பமும் வருத்தமும் இருக்கிறது என்பதை அந்தப் பகுதியின் பிரதிநிதி என்ற முறையில் நான் சொல்லிக் கொள்கிறேன்.

(Deputy Speaker in the Chair.)

அப்படிச் சொல்லும்போது, என் பகுதியில் இருக்கும் திட்டத்தைப்பற்றி மட்டும் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நான் சொல்லவில்லை. இது மாதிரியான குறைபாடு ராஜ்யத்தில் மற்ற பகுதிகளிலும் இருக்கும். எல்லோருக்கும் சேர்த்துத்தான் இதைச் சொல்கிறேன். அங்கீகரிக்கப்பட்ட திட்டங்கள் எல்லாவற்றுக்கும் முதல் இடம் கொடுத்து நிறைவேற்ற வேண்டுமென்று சொல்லிக்கொள்கிறேன்.

ரோடு போடுவதைப்பற்றிப் பேசப்படுகிறது. விவசாய அமைச்சர் அவர்கள் ரஷ்யாவுக்குப் போய்விட்டு வந்தபின், அவரிடம் பேசக்கூடிய வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அப்பொழுது அவர், "போக்கு வரத்துப் பாதைகள் மிகவும் மோசமாக இருந்ததைக் குறிப்பிட்டு, ஏன் இப்படி இருக்கிறது என்று கேட்டேன். அதற்கு அவர்கள், எங்களுக்கு ட்ராக்டர் போகக்கூடிய அளவு பாதை இருந்தால் போதும், பாதைகளுக்கு அதிகமாகச் செலவிட்டு, மற்ற அவசியமான இலாகாக்களுக்குப் பணம் இல்லாத நிலைமை ஏற்படுத்த விரும்பவில்லை என்று பதில் அளித்தார்கள்" என்று சொன்னார்கள். மற்ற இலாகாக்களில் ஏதாவது விட்டிருந்தாலும், நீர்ப்பாசனம் சம்பந்தமாக விட்டிருக்கக்கூடாது என்று நான் இந்த மன்றத்தில் வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

கவர்னர் அவர்களுடைய உரை மிகவும் பாராட்டத்தக்கதாகும். நமக்குப் புதிய உணர்ச்சியைக் கொடுக்கக் கூடியதாகவும் அமைந்திருக்கிறது. மின்சார உற்பத்தியைப் பொறுத்த வரையில் பெரிய அளவுக்கு நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. 571 மெகா வாட்டுகளிலிருந்து 1,441 மெகா வாட்டாக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவிலே உயரும் என்னும்போது, இப்படிப்பட்ட பெரிய திட்டங்கள் எல்லாம் நிறைவேற்றப்படுவது பெருமைப்படக் கூடியதாக இருக்கிறது என்று தெரிவித்து, எனக்கு இந்தச் சந்தர்ப்பத்தைக் கொடுத்ததற்காக நன்றியறிதலைத் தெரிவித்து என்னுடைய உரையை முடிக்கின்றேன். வணக்கம்.

* **SRI P. S. SANTHANAM**: துணைத்தலைவர் அவர்களே, இன்று கவர்னர் ஆற்றிய உரையினையொட்டி என் கருத்தினைச் சொல்ல முன்வந்திருக்கிறேன். இப்பொழுது கவர்னர் பெருமான் ஆற்றிய உரையிலே, 'சென்ற ஆண்டு இயற்கை சதி செய்தது, இந்த ஆண்டு நல்ல முறையிலே மழை பெய்து, மக்கள் சுபிட்சம்

[Sri P. S. Santhanam] [21st January 1961

அடைந்திருக்கிறார்கள்' என்ற வார்த்தையினைச் சொல்லியிருக்கின்றார்கள். இதைக் குறித்து உண்மையிலேயே ஒரு விதத்தில் சந்தோஷப்பட்டாலும், இந்த ஆண்டு இயற்கையின் விளைவால் அவதிக்கு உள்ளாகிய மக்கள் அத்தனை பேரும்—குடிசையில் வாழக்கூடியவர்கள்—ஏழை விவசாயிகள் என்பதைப்பற்றி இந்த மாமன்றத்தில் குறிப்பிடுகிறேன். அத்தகைய ஏழை, பாமர மக்கள் பாதிக்கப்பட்ட நிலையை கவர்னர் பெருமான் அவர்கள் குறிப்பிட்டு, அவர்களுக்கு ஏதோ நிவாரணம் அளிப்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த அவதிப்பட்ட மக்களுடைய நிலையை நாம் ஆழ்ந்து பார்ப்போமானால், அவர்களுடைய உள்ளக் குமுறலையும், எரிச்சலையும் உணர்ந்துகொள்ள முடியும். அப்படிப் பட்டவர்களுக்கு எந்த வகையிலே நிவாரணம் சர்க்கார் அளித்தார்கள் என்று கேட்கும்போது, குடிசை இழந்தவர்களும், கால் நடை இழந்தவர்களும் இப்படிப்பட்டவர்களுக்குத் தலைக்கு முப்பது ரூபாய் வீதம் நிவாரணம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று சொல்வதைக் கேட்டு உண்மையிலேயே வருத்தப்படக் கூடியவர்களாக இருக்கிறோம். சென்னையில் சாதாரணமாக ஒரு குடிசை போட வேண்டுமென்றால், 100 ரூபாய்க்குமேல் செலவு ஆகிறது. அப்படியிருக்கும்போது முப்பது ரூபாய் வீதம் சர்க்கார் நிவாரணம் அளித்தார்கள் என்றால், அந்த நிவாரணம் அளிக்கப்பட்ட தொகைக்கு அன்றையதினமே அவர்கள் கஞ்சி காய்ச்சிக் குடித்துவிட்டார்கள். உண்மையிலேயே அவர்கள் குடிசைக் கட்டிக்கொள்ளவில்லை. ஆனால், அமைச்சர்களும், கவர்னரும் அந்தச் சேதமடைந்த பகுதிகளைப் பார்த்திருந்தால், ஓரளவுக்கு அதிகமான அளவுக்கு நிவாரணம் அளித்திருப்பார்கள். தேவையான அளவு நிவாரணம் அளித்திருந்தால், கவர்னருடைய உரையை வரவேற்கலாம். ஆனால், நிவாரணம் அளிப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. அதைக் குறித்து நாமெல்லோரும் வருந்த வேண்டியவர்களாக இருக்கிறோம். பெரும்பாலும் சில நாடகக் காரர்களும், சில செல்வந்தர்களும் நிவாரணம் அளித்திருக்கிறார்கள். அவர்களுக்கு இந்த மன்றத்தின் சார்பிலும், ஏழைகளின் சார்பிலும் வாழ்த்துக்களைக் கூறுகின்றேன்.

இந்த நாட்டில் பெரும்பாலும் விவசாயத்தை நம்பி வாழக் கூடியவர்கள் இருக்கிறார்கள். இருந்தாலும், நமது சர்க்கார் விவசாயத்திற்கு என்று சென்ற ஆண்டைவிட அதிகப்படியாக நிதி ஒதுக்கியிருக்கிறார்கள் என்பதை வரவேற்கக் கூடியவர்களாக இருக்கிறார்கள்.

கவர்னர் உரையில் பெரிய நீர்ப்பாசனத் திட்டத்தைத்தான் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால், சிறிய நீர்ப்பாசனத் திட்டத்திற்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எட்டு கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டதாகவும், ஆனால், நடைமுறைத் திட்டத்தில் இதற்கு நான்கு கோடி ரூபாய் தான் ஒதுக்கப்பட்டுள்ளதாகவும் குறிப்பிட்டிருக்கிறார்கள். சாதாரண முறையில் இரண்டு ஏக்கர், ஒரு ஏக்கர் நிலம் வைத்துள்ளவர்கள் பெரிய நீர்ப்பாசனத் திட்டத்தின் கீழ் வாழக்கூடியவர்கள் அல்ல; சிறிய ஏரியின்கீழ் இரண்டு,

21st January 1961] [Sri P. S. Santhanam]

மூன்று ஏக்கர் நிலத்தை வைத்துக்கொண்டு பாசனம் செய்கிறவர்கள் ஏழைகள்தான். உதாரணமாக எடுத்துக்கொண்டால், வட ஆற்காடு மாவட்டத்தில் உள்ளவர்கள் பெரிய நீர்ப்பாசனத் திட்டத்திலிருந்து விவசாயம் செய்யக்கூடியவர்கள் அல்ல. சிறிய சிறிய நீர்ப்பாசனத் திட்டமாகிய ஏரிகளிலிருந்து தண்ணீர் எடுத்து விவசாயம் செய்யக்கூடியவர்களாக இருக்கிறார்கள். தஞ்சை ஜில்லாவில் தீவிர சாகுபடித் திட்டத்தின்கீழ் சர்க்கார் நல்ல முறையில் விவசாயிகளுக்கு உரம் அளிக்கிறார்கள். ஆனால், வடாற்காடு மாவட்டமானது, தஞ்சை மாவட்டத்திற்கு அடுத்த படியாக நெல் விளைச்சல் செய்வதில் பின்வாங்காமல் இருப்பதாக சர்க்கார்த் திட்டத்தில் கூறப்பட்டிருக்கிறது. வடாற்காடு ஜில்லாவிலே உள்ளவர்கள் பெரிய அணைக்கட்டுத் திட்டத்தால் நன்மை பெறுவதில்லை. பெரும்பாலும் ஏரிப் பாசனத்தைக் கொண்டு விவசாயம் செய்கிறவர்களாக இருக்கிறார்கள். அத்தகைய மாவட்டத்திற்குத் தகுந்த சாதனங்கள், உரங்கள், விவசாயக் கருவிகள் கொடுக்கப்படவேண்டும். ஆனால், ஹைவேஸ் இலாகாவினரைக் கேட்டால், உணவு இலாகாவைக் கேட்கச் சொல்கிறார்கள். அவர்கள் மற்றவரிடம் போகச் சொல்கிறார்கள். எங்களுக்குச் சம்பந்தமில்லை, யூனியன் கவுன்சிலைக் கேளுங்கள் என்று சொல்லக்கூடிய வகையிலே நடைபெறுகிறது. அதனால் அங்குள்ள பெரிய கால்வாய்கள் செப்பனிடப்படாத காரணத்தால் பெய்யும் மழைத் தண்ணீர் பாழாய்விடுகிறது. சர்க்கார் சிறிய நீர்ப்பாசனத் திட்டத்திற்கு எட்டுகோடி ரூபாய் ஒதுக்கியிருப்பதை, பெரிய நீர்ப்பாசன வசதி இல்லாத சேலம், தென்னாற்காடு, வடாற்காடு மாவட்டங்களில் செலவு செய்தால், அந்த மாவட்டங்கள் நன்மை அடைவதோடு விவசாய உற்பத்தி செய்யவும் ஏதுவாக இருக்கும்.

சிறிய கைத்தொழில்களைப்பற்றி நாம் வரவேற்கக் கூடியவர்களாய் இருக்கிறோம். அதற்காகத் தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஸ்மால் ஸ்கேல் இன்டஸ்ட்ரீஸ் என்ற வகையில், செங்கல் அறுப்பது, தோல் பதனிடுவது, தையல் மிஷின் வைப்பது, விவசாயக் கருவிகள் செய்வது, எண்ணெய் உற்பத்தி செய்வது, என்பவைகளுக்கு ஏராளமாக சர்க்கார் பணம் கொடுக்கிறார்கள். ஆனால், கொடுப்பதன் நோக்கமென்ன? சாமான்கள் ஏராளமாகச் செய்யப்பட்டால் அங்குள்ள விவசாயிகளுக்கு நல்ல முறையில் கிடைக்கும் என்ற நல்ல நோக்கத்துடன்தான் சர்க்கார் திட்டமிடுகிறது. ஆனால், திட்டத்தை நல்ல முறையில் நடத்துகிறார்களா என்று கவனிப்பதற்கு சர்க்கார் ஏனோ கவனக் குறைவாக இருப்பதைக் கண்டு நான் வேதனைப்படுகிறேன். விவசாயத்திற்கு வேண்டிய மண்வெட்டி, கடப்பாரை, களைவெட்டி, கார் போன்ற சாமான்கள் உற்பத்தி செய்ய ஐயாயிரம் ரூபாய், இரண்டாயிரம் ரூபாய் என்று சர்க்கார் கொடுக்கிறார்கள். ஆனால், அந்தத் தொழில்களை நல்ல முறையில் நடத்துகிறார்களா என்றால், வடாற்காடு மாவட்டத்தைப் பொறுத்தவரையில் சொல்வேன், கிடையவே கிடையாது என்று. சாதாரணமான முறையில் யார் செங்கல்

அறுக்கிறார்களோ, யார் கொல்லப்பட்டறை வைத்திருக்கிறார்களோ அவர்களுக்கு இந்தப் பணம் உதவி செய்யப்படுவது கிடையாது. சிறு தொழில் வளர்ச்சி என்ற அடிப்படையில் ஐயாயிரம், பத்தாயிரம் என்று பணக்காரர்களுக்குத்தான் இந்தப் பணம் போய்ச் சேருகிறது. அந்த அந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கிற மக்களுக்கு உண்மையில் கிடையாது. இந்த அவல நிலையைப் போக்குவதற்கு சர்க்கார் முயற்சி செய்யவேண்டும். ஆண்டு தோறும் பணம் ஒதுக்கிவிட்டால் போதாது. தாராளமாக விநியோகம் செய்கிறோம் என்று—பணக்காரர்களிடத்திலேயே விநியோகித்துவிட்டால் போதாது. இன்றைக்கு ஒரு அருந்ததியார் வீட்டில் சென்று கார் கொடு என்றால் கிடையாது. கருமார் வீட்டில் தொண்டான் கொடு என்றால் கிடையாது. இந்த நிலை போகவேண்டும். எவன் தொழில் செய்கிறானே அவனுக்கு சொத்து இல்லாவிட்டாலும், ஜாமீன் பேரில் கொடுத்து உண்மையிலேயே சிறு தொழில் அபிவிருத்திக்காக ஒதுக்கப்படுகிற பணம் தொழில் அபிவிருத்திக்காகவே செலவிடப்படுவதற்கு நாம் முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும். அதைச் செய்வதற்கு என்னமோ இந்தச் சர்க்கார் தவறி விட்டது என்று இந்த மாமன்றத்தில் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

கவர்னர்பெருமான் தம்முடைய உரையில் சென்ற ஆண்டைவிட அதிகமாக அதாவது கல்விக்காக 32 கோடி ஒதுக்கப்பட்டிருப்பதாகச் சொன்னார். ஆறு வயதில் இருந்து 11 வயது வரைக்கும் கட்டாயக் கல்வி என்ற திட்டத்தையும் கொண்டு வந்திருக்கிறார்கள். ஆனால் ஒன்று சொல்ல விரும்புகிறேன். ஆதித்திராவிட மக்கள், பிற்பட்ட சமூகத்தினர் இவர்களுக்கு தொடர்ந்து கல்விச் சலுகை அதிகமாக அளித்து வரவேண்டும். எனக்கு முன் பேசிய கனம் அங்கத்தினர் "ஆதித்திராவிட மக்களுக்கு நல்ல சலுகை அளித்து வருகிறோம். தீண்டாமை ஒழிப்புக் கொண்டு வந்தோம். இதனால் முன்னேறிவிட்டார்கள்" என்று சொன்னார்கள். உண்மையில் நான் வருந்துகிறேன். காரணம் இப்படிப்பட்ட ஒரு அபிப்பிராயம்—ஆதித்திராவிட மக்கள் எல்லாம் நல்ல முன்னேற்றம் அடைந்து விட்டார்கள் என்ற எண்ணம் தவறாகப் பரவி வருகிறது. இதனால் சிலருக்குப் பொறாமை கூட வளர்ந்துவிட்டது. இன்றையதினம் 3¾ கோடி மக்கள் இருக்கிறார்கள். மொத்த ஜனத்தொகையில் 6-ல் ஒரு பங்கு நல்ல உழைப்பாளிகள். ஆனால் உழைப்பின் பலனைக் கூடப் பெறமுடியாத வகையில் பலவகையிலும் வஞ்சிக்கப்படுகிறவர்கள். அந்தச் சமூகத்தினர் முன்னேற வேண்டும் என்று சர்க்கார் பல காரியங்களைச் செய்து வருகிறார்கள் என்பதற்காகப் பாராட்டவேண்டும். ஆனால் எத்தனை பேர்கள் முன்னேறியிருக்கிறார்கள்? ஸ்காலர்ஷிப் என்றால் ஒரு பையனுக்கு 1¼ ரூபாயில் இருந்து 3½ ரூபாய் வரை கொடுக்கிறார்கள். அவ்வளவுதான். அதுவும் நூற்றுக்கு 25 பேர்களுக்குக்கூட இந்த உதவி கிடைக்கவில்லை. எனக்குத் தெரியும். கிட்டத்தட்ட ஆயிரத்து ஐநூறு பேர்களுக்கு நான் சர்டிபிகேட் கொடுத்திருக்கிறேன். நூற்று

21st January 1961] [Sri P. S. Santhanam]

இருபது பேர்களுக்குத்தான் ஸ்காலர்ஷிப் கிடைத்திருக்கிறது. அதை வாங்கிவிட்டால் ஹரிஜனப் பிள்ளைகள் முன்னேறி விடுவார்களா? முன்னேறிவிட்டார்களா? ஆகவே ஹரிஜனங்களை முன்னேறி விட்டார்கள் என்று சொல்வது தவறு.

ஹரிஜனப் பிள்ளைகளுக்கும், பிற்பட்ட வகுப்பு பிள்ளைகளுக்கும் மத்தியான உணவு போடுகிறோம். இதற்காக மாணவன் ஒன்றுக்கு 6 நையா பைசா ஒதுக்குகிறோம். ஆறு நையா பைசாவை வைத்துக்கொண்டு பகல் உணவு போடுகிறோம் என்றால் வேதனைப்பட வேண்டியிருக்கிறது. ஒரு படி அரிசி ஒரு ரூபாய். ஆசிரியர்களைக் கேட்டால் "இந்த ஆறு நையா பைசாவுக்கு வீசம் படி அரிசி தானே கிடைக்கும். அப்புறம் உப்பு மிளகாய், புளி வாங்க வேண்டாமா? விறகு வேண்டுமே" என்கிறார்கள். கஞ்சி காச்சி விட்டால் . . என்று புராணம் கூறுகிறதே, அதுபோல ஒரு கொட்டாங்கச்சி கஞ்சியாவது வார்க்கலாம். அதுவும் 17 லட்சம் மக்களுக்கு வார்க்கிறோம் கஞ்சி என்றால் பாருங்கள். ஆகவே நான் இந்த மாமன்றத்தில் கேட்டுக்கொள்கிறேன், தலைக்கு 6 நையா பைசா என்று இருப்பதை 9 நையா பைசா என்றாவது உயர்த்திக் கொடுக்கவேண்டும். அதுபற்றிய அபிப்பிராயம் ஒன்றும் கவர்னர் உரையில் கூறப்படவில்லை.

தொழில் உற்பத்தியில் இரண்டு லட்சம் டன் சர்க்கரை உற்பத்தி செய்ய வேண்டுமென்று குறிப்பிட்டார்கள். நான் பாராட்டுகிறேன். ஆனால், இலவுகாத்த கிளியாக நாங்கள் ஆகிவிட்டோம். திருவண்ணாமலையை நினைத்துக்கொள்ளவேண்டும். ரெங்கசாமி ரெட்டியார் என்று ஒருவர் இருந்தார். சர்க்கரை ஆலையை திருவண்ணாமலையில் வைக்கவேண்டும் என்று அன்றைக்கே அவர் லைசென்சு பெற்று வந்தார். அவர் ஜஸ்டிஸ் கட்சிக்காரர் ஆதலால் அவருடன் ஒத்துழைக்கமாட்டோம் என ஆளும் கட்சியினர் முரண்பாடு பண்ணியதன் காரணமாக லைசென்சு ரத்து செய்யப்பட்டது. "நெல்லுக்கு இறைத்த நீர் வாய்க்கால் வழியோடி புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்" என்ற பெரியவரின் சொல்லுக்கிணங்க, யாருக்கு லைசென்சு கொடுத்தாலும் நாடு சுபிட்சம் அடையவேண்டும் என்பதுதான் எங்கள் குறிக்கோள். இப்போதாவது உங்கள் சார்பில் கொண்டுவாருங்கள், நாங்கள் ஒத்துழைக்கிறோம் என்று அன்றைக்கே சொன்னோம். இன்றும் சொல்கிறோம். சர்க்காருடைய குறிப்பிலே நான்கு ஆலைகள் இந்த மாகாணத்திற்கு வரும் என்று இருக்கிறதே தவிர எந்த எந்த ஜில்லாவில் என்பது குறிப்பிடப்படவில்லை. நிச்சயமாக திருவண்ணாமலையில் கூட்டுறவு சொஸைடியின் மூலமாகவாவது ஒரு சர்க்கரை ஆலை ஏற்படுத்துவதற்கு முன் வந்தால் ஏறக்குறைய நான்கு லட்சம் மக்களுக்கு சுபிட்சத்தை ஏற்படுத்தும். சாத்தனூர் அணைக்கட்டுத் திட்டம் இருக்கிறது. பல்லாயிரக்கணக்கான ஏக்கராவுக்கு சாகுபடி செய்ய நீர்ப்பாசன வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே நிச்சயமாக ஒரு சர்க்கரை ஆலையை அங்கே கொண்டுவரவேண்டும் என்று தொழிலாளி, பாமர மக்கள் சார்பாகக் கேட்டுக் கொள்கிறேன்.

[Sri P. S. Santhanam] [21st January 1961

அடுத்தபடியாக இந்த ஆண்டு பெய்த பேய்மழையின் காரணமாக விவசாயிகள் பாதிக்கப்பட்டார்கள், ஏழைகள் குடிசைகளை இழந்துவிட்டார்கள். அதோடுகூட, இந்தப் பேய்மழையின் காரணமாக வடாற்காடு மாவட்டத்தில் ஒரு கொடிய வியாதி பரவி வருகிறது. அதுதான் வயிற்றுப்போக்கு, பேதி வியாதி. சாதாரணமாக 150 பவுண்டு இருந்த ஒருவன் பதினைந்து நாட்களுக்குள் 80 பவுண்டாகக் காட்சி அளிக்கிறான். இதுபற்றி சென்ற வாரத்திலே ப்ளானிங் கமிட்டிக் கூட்டத்திலே மருத்துவ அதிகாரியிடத்தில் சொன்னேன். போதுமான மருந்து வசதி கிடையாது என்று அவர் சொன்னார். உடனடியாக நடமாடும் ஆஸ்பத்திரிகளின் மூலமாகவாவது இந்தக் கொடிய வியாதியைத் தடுப்பதற்குத் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

திருவண்ணாமலையில் ஒரே சமயத்தில் நாற்பது பேர்கள் காலமாகி விட்டார்கள். அந்த வியாதிக்கு தகுந்த நிவாரணம் அளிக்கப்பட வேண்டும். கவர்னர் அவர்கள் கூறியிருக்கிறார்கள், நல்ல மழை பெய்திருக்கிறது, விவசாயம் செழிப்படைந்து விட்டது, விலைவாசிகள் குறைந்துவிட்டன, சுபிட்சம் வந்து விடும் என்று. (மணியடிக்கப்பட்டது) சுபிட்சம் அடைவதற்குள்ளாக, இன்பம் அனுபவிப்பதற்குள்ளாக மரணத்தை எதிர்நோக்கும் நிலை தான் இருக்கிறது. (மணியடிக்கப்பட்டது.) ஆகவே, இந்த வியாதியை அகற்றுவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

* **Sri A. PERUMAL :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் கவர்னர் பெருமான் அவர்கள் உரையின்மீது நான் சில கருத்துக்களைத் தெரிவிக்க முன்வந்துள்ளேன். நமது ராஜ்யத்தின் விவசாயத்தை பெருக்கவேண்டும், விவசாயத்தைப் பெருக்கி அதன்மூலம் நம்நாடு சுபிட்சம் அடைய வேண்டும். அதனால் மக்களுக்கு நன்மை கிடைக்கவேண்டுமென்றும் கவர்னர் பெருமான் அவர்கள் உரையில் கூறப்பட்டிருக்கிறது. அதன்மூலம் விவசாயிகளுக்கு வேண்டிய நன்மைகள் காலாகாலத்தில் கிடைக்கிறதா என்று பார்த்தால் அப்படி தக்க சமயத்தில் கிடைப்பது தவிர்க்கப்பட்டு விடுகிறது. ஏனெனில், சர்க்கார் சிப்பந்திகளின் குறைகளினால்தான் விவசாயிகளுக்கு நன்மை கிடைக்கவில்லை என்பது என் கருத்து. விதை விதைக்கும் காலத்தில் விதைக்காக சர்க்கார் அதிகாரிகளைப்போய் கேட்கும்போது அந்த சம்பந்தப்பட்ட அதிகாரிகள் விதை இன்னும் வரவில்லை, வருவதற்கு ஒரு மாதகாலம் ஆகும், ஆகவே ஒரு மாதம் கழிந்து வாருங்கள் விதை தருகிறோம் என்று சொல்கிறார்கள். மழை பெய்து எப்பொழுது விதைக்கவேண்டுமோ, அதற்குப் பிறகு ஒரு மாதம் கழித்து விதைத்தால் விவசாயத்தைப் பெருக்க முடியுமா என்று இந்த மன்றத்திலுள்ள அங்கத்தினர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அடுத்தபடியாக, விவசாயிகள் கடன் வேண்டுமென்று சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் போய் கேட்டால், அதற்கு மனு செய்யும்படி சொல்லி மனுவை பரிசீலனை

21st January 1961] [Sri A. Perumal]

செய்ய மூன்று நான்கு மாதங்கள் ஆகின்றன. அதற்குப் பிறகும் நான்கு மாதங்கள் கழித்துத்தான் கடன் விவசாயிகளுக்கு கிடைக்கிறது. இப்படிப்பட்ட குறைகள் இருக்கக் கூடாது. சர்க்கார் நல்ல திட்டங்களை வகுத்து ஆங்காங்குள்ள சர்க்கார் சிப்பந்திகளிடம் கொடுத்து அவர்கள் அதை கெடுத்து விடுகிறார்கள். இப்படிப்பட்ட காரியங்களை சர்க்கார் உடனடியாக கண்டிக்க வேண்டும். ஆகவே, சர்க்கார் சிப்பந்திகள் விவசாய மக்களுக்கு வேண்டிய உதவிகளை அவர்களுக்கு நல்லமுறையில் காலாகாலத்தில் செய்ய வேண்டுமென்று ஒரு உத்தரவு பிறப்பிக்குமாறு சர்க்காரை நான் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, எங்கள் முதுகுளத்தூர் தொகுதியில் கிருதமால் நதி என்று ஒரு நதி இருக்கிறது. அதுபற்றி இந்த சபையில் பலமுறை சொல்லியிருக்கிறோம். சமீபகாலத்தில்கூட முதலமைச்சர் கனம் காமராஜ் அவர்கள் எங்கள் தொகுதிக்கு வந்து ஒரு காங்கிரஸ் மகா நாடுகூட ஏற்படுத்தி அதன்மூலம் பொது மக்களுக்கு ஒரு இன்பமான வார்த்தையை சொல்லிவிட்டு வந்துவிட்டார்கள். கிருதமால் நதியை நன்கு செப்பனிட்டுக் கொடுத்தால் நல்ல முறையில் விவசாயத்தை பெருக்குவதற்கும், அங்குள்ள மக்கள் சுபிட்சமாக வாழ்வதற்கும் வழியிருக்கும் என்று இந்த மன்றத்தில் நான்கு வருடங்களாக சொல்லிக்கொண்டு வருகிறோம். ஆனால் எந்த விதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. இந்த கிருதமால் நதித் திட்டத்தை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக் கொண்டு அமைச்சர் அவர்கள் அங்குள்ள மக்களுக்கு நல்லதொரு வழிவகை செய்யவேண்டும். அப்படி நல்லதொரு வகை செய்து கொடுக்க வேண்டுமென்று இந்த சபையிலுள்ள எல்லா அங்கத்தினர்கள் முன்னிலையில் கனம் அமைச்சர் அவர்களை கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக, ரோடு வசதி. அதிர்ஷ்டவசமாக மூன்று ஆண்டுகளுக்கு முன்பாக எங்கள் பகுதியில் கலவரம் நடந்ததை முன்னிட்டு சிற்சில இடங்களில் மண்ணை வெட்டி ரோடு போட்டு விட்டார்கள். அந்த ரோடு போடுவதற்கு முன்பு அங்கு ஜனங்கள் பிரயாணம் செய்ய வசதியாகயிருந்தது. இப்பொழுது, மண்ணை வெட்டி போட்டதால் மழையில் முட்டுக்கு இறங்குகிறது சகதி. பாதையாகயிருந்தால் மக்கள் பிரயாணம் செய்ய முடியும். ஆகவே, அங்கு சாலைகள் பரவி நல்ல வசதி செய்துகொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**THE HON. SRI P. KAKKAN :** செக்யூரிட்டி மெஷெர்ஸ்-க்கு போடும் ரோடுகளை நல்ல முறையில் வைக்க ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. பெரிய மழை பெய்ததால் சகதி வந்திருக்கலாம். நல்ல முறையில் மெட்டல் பரப்ப ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

**SRI A. PERUMAL :** அமைச்சர் அவர்கள் கொடுத்த பதிலை முன்னிட்டு நான் அவர்களைப் பாராட்டுகிறேன். அடுத்தபடியாக, மின்சார வசதி என் தொகுதியில் ஒரு சில கிராமங்களில்தான் மின்சார வசதியிருக்கிறது. மற்ற கிராமங்களில் மின்சார வசதி இல்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மின்சாரம் இல்லாத கிராமங்களே இருக்காது என்று சொல்லப்பட்டிருக்

[Sri A. Perumal] [21st January 1961

கிறது. அதை வரவேற்கிறேன் முதுகுளத்தூர் தொகுதியில் நீர்ப்பாசன வசதி இல்லாததினால், மின்சார வசதியை முன்னிட்டு சில ஊற்றுக் கிணறுகளை தோண்டி அதனால் விவசாயத்தைப் பெருக்க உதவியாகயிருக்கும். எங்கள் தாலுகா மிகவும் பிற் போக்கான தாலுகா. முதுகுளத்தூர் தாலுகாவில் எந்த வித தொழிற்சாலையும் கிடையாது. தொழில் வளம் உள்ள இடங்களில் தான் அதிக செழிப்பான ஜில்லாக்களில் எல்லாத் தொழிற்சாலை களும் இருக்கின்றன, மேலும் மேலும் அதிகப்படுத்திக் கொண்டும் வரப்படுகிறது. எங்கள் முதுகுளத்தூர் தொகுதியில் ஒரு தொழிற் சாலையும் கிடையாது.

ஆகையினால் மூன்றாவது ஐந்தாண்டுத்திட்டத்தில் என்னுடைய
12-00 noon. தொகுதியில் ஒரு தொழிற்சாலை ஏற்படுத்திக்கொடுக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக கவர்னர் பெருமான் அவர்களது உரையில் சுமார் 17 லட்சம் மாணவர் களுக்கு மதியஉணவு கொடுத்துக்கொண்டிருப்பதாக குறிப்பிட் டிருக்கிறார்கள். உண்மையில் அது வரவேற்க வேண்டியதுதான். இந்தத் திட்டத்தின்மூலம் பல மாணவர்கள் கல்வி பயில வசதி ஏற்படுகிறது என்பது உண்மைதான், அதற்காக நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றோம். ஆனால் என்னுடைய தொகுதியில் இரண்டு மாதங்களாக சில கிராமங்களில் இந்த மதிய உணவு கொடுப்பது நிறுத்தப்பட்டிருக்கிறது. இது சம்பந்தமான அதிகாரிகளிடத்தில் இதற்கு காரணம் என்ன என்று கேட்ட போது, அவர்கள் இதற்கென்று (அலாட்மெண்டு) ஒதுக்கப்பட் டிருந்த ரூபாய் செலவாகிப் போய்விட்டது, இப்போது ரூபாய் இல்லை, ரூபாய் வந்ததின் பின்னால் திரும்பவும் போடப்படும் என்று சொன்னார்கள். ஆனால் பக்கத்திலுள்ள வேறு பல கிராமங்களுக்கு தொடர்ச்சியாக போட்டுக்கொண்டிருக்கிறார்கள். பின்னால் இதைப்பற்றி ஜில்லாக் கலக்டர் அவர்களிடத்தில் போய் கேட்ட தற்கு மானேஜ்மென்ட் ஸ்கூல்களுக்கு மதியஉணவு போடுவதை நிறுத்திவிடும்படி உத்தரவு வந்திருக்கிறது என்றும், அதிலும் இந்து அரிஜன பிள்ளைகளுக்குத்தான் இந்த மதிய உணவு போடப் படும் என்றும், கிருஸ்தவ பிள்ளைகளுக்கு போட இயலாது என்றும் தெரிவிக்கப்பட்டது. என்னுடைய தொகுதியைப்பொறுத்த வரையில் அதிகமாக அரிஜன கிருஸ்தவர்கள்தான் இருக்கிறார்கள். கிருஸ்தவ ஜாதி என்றால் உயர்வான ஜாதி என்று பலர் நினைக்கிறார் கள். ஏழை, பணக்காரர் என்ற இரண்டே ஜாதிதான் இருக்கிறதே தவிர கிருஸ்தவர்கள் உயர்வான ஜாதி என்றோ, மற்றவர்கள் தாழ்வான ஜாதிக்காரர்கள் என்றோ சொல்வது மிகவும் கடினமான வார்த்தையாகும்.

THE HON. SRI P. KAKKAN : நீங்கள் இப்படிச் சொல்வதுதான் கடினமான வார்த்தையாக இருக்கிறது.

* SRI A. PERUMAL : சர்க்காரிலிருந்து இந்த வித்தி யாசம் காட்டவில்லையென்றால் இது கடினமானது என்று சொல்லமாட்டேன். ஆகவே எந்தவிதமான வித்தியாசமும் காண்பிக்காமல் ஏழையாய் இருக்கின்ற எல்லா மாணவர்களுக்கும்

21st January 1961] [Sri A. Perumal]

மதியஉணவு அளிக்க கனம் அமைச்சர் அவர்கள் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

* SRI G. VAGHEESAM PILLAI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றிய உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். உரையில் முதலில் நம்முடைய பிரிட்டிஷ் ராணி, காமன்வெல்த் தலைவி இங்கு வருவதைப்பற்றி குறிப்பிட்டு அவர்களை வரவேற்றிருக்கிறார்கள். நாமும் உண்மை யிலேயே அவர்களை வரவேற்க கடமைப்பட்டிருக்கிறோம். மேலும் சென்ற மாதங்களில் பெய்த மழையைக் குறிப்பிட்டு அதனால் ஏற்பட்ட நன்மை, தீமைகளைப்பற்றி பொதுவாக குறிப்பிட்டிருக் கிறார்கள். தஞ்சை ஜில்லாவில் பல இடங்கள், அதே போன்று தென்னாற்காடு ஜில்லாவில் பல இடங்கள் மழையினால் சேதம் அடைந்தன. பயிர்களுக்கும் அதிகமான அளவில் சேதம் ஏற்பட்டது. இவைகளை எல்லாம் குறிப்பிட்டுத்தான் கவர்னர் அவர்கள் பொதுவாக அவர்கள் உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். நம்முடைய சென்னை ராஜ்யம் கழிந்த 15 வருடங்களாக காணாத வகையில் மழை பெய்தது. தண்ணீரே நிரம்பாத குளம், குட்டைகள் எல்லாம் தண்ணீர் நிரம்பியது. இதைப்பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார்கள் கவர்னர் அவர்கள். தென்னாற்காடு மாவட்டத்தில் குடிசைவாழ் மக்களுக்கு உடனடியாக நிவாரணம் அளிக்கின்ற முறையில் சுமார் 2 லட்சம் ரூபாய் வரை கொடுத்திருக்கிறார்கள். ஒவ்வொரு வீட்டுக்கும் 30 ரூபாய் வீதம் உடனடியாக நிவாரணத்திற்காக கொடுக்கப்பட்டது. சில வீடுகளுக்குத்தான் 30 ரூபாய் கொடுக்கப்பட்டது. சிலருக்கு குறைவாகத்தான் கொடுக்கப்பட்டது என்றும் இதில் பாகுபாடு காண்பிக்கப்பட்டது என்றும் சிலர் குறிப்பிட்டார்கள். இவ்விதம் பாகுபாடு ஒன்றும் உண்மையில் காண்பிக்கவில்லை. பூரா வீடும் இடிந்துபோனால் அதற்கு 30 ரூபாய் என்றும், ஒரு சுவர் மட்டும் தான் இடிந்து போனால் 10 ரூபாய் என்றும், 15 ரூபாய் என்றும் கொடுக்கப்பட்டது. ஆகவே இதில் பாகுபாடு ஒன்றும் காண்பிக்க வில்லை என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். மேலும் மழை யினால் பாதிக்கப்பட்ட இரண்டு அரிஜன காலனிகளிலும் நாட்டார் மங்கலம், வீராநல்லூரில் ஏற்பட்ட சேதத்தைப் பார்த்து அதை திருத்தி அமைப்பதற்காக ஒன்றரை லட்சம் ரூபாய் ஒதுக்கப் பட்டிருக்கிறது. அதோடு பக்கத்திலுள்ள ஏரிகள் எல்லாம் (தூர் வாருவதற்காக) மராமத்து செய்வதற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதோடு விவசாயத்திற்கு வேண்டிய ஜலம் எல்லா ஏரிகளிலும் வந்து விட்டது. அதிலும் முக்கியமாக சிதம்பரம், தஞ்சாவூர் போன்ற இடங்களில் இரண்டாம் போகம் நிலங்கள் எல்லாம் சுமார் லட்சம் ஏக்கர்களுக்குமேல் கெட்டுப்போய்விட்டது. சிதம்பரம் தாலுகாவில் மட்டும் பல ஆயிரக்கணக்கான ஏக்கர்கள் நஷ்டம் அடைந்திருக்கின்றன இவைகள் எல்லாம் இருந்தும்கூட பொதுவாக மழையினால்

[Sri G. Vagheesam Pillai] [21st January 1961

தன்மை ஏற்பட்டிருக்கிறது என்று கவர்னர் பெருமான் அவர்கள் தனது உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். மேலும் பாதிக்கப் பட்ட நிலங்களில் மீண்டும் பயிர் செய்வதற்காக விதைகள், உரங்கள் எல்லாம் விவசாய இலாகாவினால் கொடுக்கப்பட்டன. இதில் உரங்களை வரவழைப்பதில் காலதாமதம் ஏற்பட்டதால் விவசாயிகளுக்கு சரியான நேரத்தில் கிடைக்கவில்லை. அதிலும் இப்போது எல்லா விவசாயிகளும் அமோனியம் சல்பேட், சூப்பர் பாஸ்பேட் முதலிய உரங்களை அதிகமான அளவில் உபயோகிக்க ஆரம்பித்து விட்டதால் அதை (இம்போர்ட்) இறக்குமதி செய்வதில் கொஞ்சம் காலதாமதம் ஏற்படுகிறது. அந்நிய செலாவணி கஷ்டம் இருந்தாலும்கூட இம்மாதிரிப்பட்ட உரங்களை இறக்குமதி செய்வதில் அரசாங்கம் அக்கரையோடு கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு உரங்களை இறக்குமதி செய்வதில் பிரையாரிட்டி கொடுத்து அதிகமான அளவு இறக்குமதி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் கவர்னர் அவர்களது உரையில் நம்முடைய இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவடைந்து, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பிக்கிற இந்த நேரத்தில், திட்டங்களில் சேர்க்கப் பட்டிருக்கும் வேலைகளைப்பற்றியெல்லாம் விளக்கமாக குறிப்பிட் டிருக்கிறார்கள். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சில ராஜ்யங்களில் ஒதுக்கின தொகையைக்கூட செலவு செய்யாமல் விட்டிருக்கிறார்கள், நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்தவரை அப்படியில்லாமல் நல்லமுறையில் அதிகமாகவே செலவு செய்திருக் கிறார்கள். இப்போது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத் திற்காக 291 கோடி ரூபாய் செலவு செய்ய திட்டமிடப்பட்டிருக் கிறது. விவசாயத்திற்கு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 14½ கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தது. இப்போது 27 கோடி ரூபாய் இந்தத் திட்டத்தில் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதுவும் கூட போதாது என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது. நடுத்தர விவசாயிகளுக்கு அதிகமான அளவில் பணம் கொடுக்க வேண்டும். ஸ்பெஷல் மைனர் இர்ரிகேஷன் போன்றவைகளுக்கு அதிகமான அளவில் செலவு செய்யத்தான் வேண்டும். கூடுதலாக செலவு செய் தாலும்கூட அதை ஈடு செய்து கொள்ளலாம் என்று கவர்னர் அவர் கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆகவே எல்லா மைனர் இர்ரிகேஷன் திட்டங்களையும் நாம் எடுத்துக் கொள்ள வேண்டும். அதோடு பரம்பிக்குளத் திட்டத்தைப்பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார்கள். இதற்காக நாம் சர்க்காரை பாராட்ட கடமைப்பட்டிருக்கிறோம். இதன் மூலம் மின்சார உற்பத்தி அதிகமாக கிடைக்கும், அதோடு பல ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்கள் பாசன வசதி பெறும் என்றும் தெரிகிறது. அதோடு கிருஷ்ணா-கோதாவரி தண்ணீரை பங்கிடுவதில் மைசூர் ராஜ்யத்திற்கும் பம்பாய் ராஜ்யத்திற்கும் தகராறு இருந்து கொண்டிருக்கிறது. அந்த ராஜ்யங்களுக்கு கொடுத்தது போக பாக்கி ஜலத்தை நாம் உபயோகித்துக் கொள்ளலாம். இதற்காக ஒரு சப்-டிவிஷன் அமைத்து சென்னை, செங்கற்பட்டு, தென்னாற்காடு போன்ற இடங்களில் எல்லாம்

21st January 1961] [Sri G. Vagheesam Pillai]

எவ்வளவு தண்ணீர் கிடைக்கும் என்பதற்கு ப்ளூ பிரின்ட் எல்லாம் எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதை நாம் வற்புறுத்திச் சொல்லிக்கொண்டிருக்க வேண்டும். அண்டை ராஜ்யங்களோடு கலந்து ஆலோசித்து எப்படியாவது கொண்டு வரவேண்டும். இந்தத் திட்டம் வந்துவிட்டால் சென்னை நகரத்திற்கு சுலபமாக தண்ணீர் சப்ளை செய்ய முடியும். ஆகவே அண்டை ராஜ்யங்களில் ஆட்சேபணை இருந்தாலும் நம்முடைய ராஜ்யம் அடிக்கடி வற்புறுத்தி வந்து அந்தத் திட்டத்தை நிறைவேற்றினால் இரண்டு மூன்று ஜில்லாக்களுக்கு தண்ணீர் வசதி ஏற்பட்டு அதனால் விவசாயம் பெருக முடியும்; அதோடு சென்னை நகருக்கும் குடி தண்ணீர் வசதி ஏற்படும். அதையும் கைவிட்டு விடாமல் அவசியம் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கின்றேன்.

சிறிய நீர்ப்பாசனத்திற்கு 4 கோடி ரூபாயிலிருந்து 8 கோடி ரூபாய் வரை ஒதுக்கியிருக்கின்றார்கள். இன்னும் நமது ராஜ்யத்தி லுள்ள டெல்டாப் பிரதேசத்திலும், மற்ற பிரதேசங்களிலும், எனக்கு முன்பு பேசிய அங்கத்தினர்களும் குறிப்பிட்டார்கள், நல்ல முறையில் வாய்க்கால் வெட்டு செய்ய வேண்டும். பாய்ச்சல் ஆதாரம், வடிகால் ஆதாரம் இரண்டும் விவசாயத்திற்கு மிகவும் முக்கியமானது. 1,000 அல்லது 2,000 ஏக்கர் ஆயக்கட்டு எரியா இருந்தால் சர்க்கார் செலவில் வெட்டிக்கொடுக்கலாம் என்று உத்திரவு இருக்கின்றது. குடிமராமத்து ஆக்டப்படி எந்தெந்த ஊரில் வாய்க்கால் வெட்டவில்லையோ, அங்கெல்லாம் ஆக்டை "என்போர்ஸ்" செய்து எந்தெந்த கிராமத்தில் வெட்ட வேண்டு மென்று விரும்புகின்றார்களோ அவர்களுக்கு வெட்டிக் கொடுக்க வேண்டும். அதோடு கூட வடிகால் வசதி செய்து கொடுக்க வேண்டும். தஞ்சை ஜில்லா போன்ற ஜில்லாவிற்கு சிறிய சிறிய நீர்ப்பாசனத்திற்காக, வாய்க்கால், வடிகால்கள் வெட்டுவதற்காக தனி ஸப்-டிவிஷன் ஏற்படுத்தினால் நல்லது. எங்களுடைய மாவட்டத்திலே ஒரு செக்ஷன் ஏற்படுத்தலாம். இதனால் விவசாயிகள் நல்ல ஒரு பலனை அடைந்திருக்கின்றார்கள். சென்ற 5 அல்லது 6 வருஷங்களில் அரசாங்கத்தின் உதவியால் சிலட் கிளியரன்ஸ் செய்யப்பட்டதில் 10,000 அல்லது 15,000 ஏக்கர் இருபோக சாகுபடியாக இருந்தது 45,000 ஏக்கராக உயர்ந்திருக் கின்றது. இதற்கு கொஞ்சம் பணம்தான் செலவாகும். விவசாயி களிடம் வசூல் செய்து கொள்ளலாம். அவர்கள் கொடுக்கத் தயாராக இருக்கின்றார்கள். அதற்கு தனியாக ஒரு ஸப்-டிவிஷன் ஏற்படுத்தினால் நல்ல முறையில் கவனம் செலுத்த முடியும். அதையும் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கின்றேன்.

இப்போது பெருவாரியான நதிகளிலெல்லாம் அணைக்கட்டுகள் கட்டியது போக கீழே அடி நீர் ஊற்றுகள் இருக்கின்றன. எங்கள் மாவட்டத்தில் ஆர்ட்டீஷியன் ஊற்றுக்கள் சுமார் 100 ஊற்றுகள் தோண்டப்பட்டு, இன்னும் 100 ஊற்றுகளுக்கான வேலைகளைச் செய்து நிறைவேற்றி வருகின்றார்கள். இதனால் நல்ல பலன் இருக்கின்றது. இதை இன்னும் விஸ்தரிக்க வேண்டும். இந்த அடி நீர் ஊற்றுத் திட்டத்திற்காக

ஒரு டெபுடி டைரக்டர் இருக்கிறார்கள். ஜாயின்ட் டைரக்டர் போன்றவரை நியமித்து நல்ல வசதி செய்து கொடுக்கவேண்டும். இதற்காக அந்நிய நாட்டிலிருந்து ரோட்டரி டிரில்ஸ் போன்றவைகளை வரவழைக்கவேண்டும். டிரில்ஸ் பற்றாக்குறையினால் தீவிரமாகச் செய்ய முடியவில்லை. எங்கள் மாவட்டத்தில் ஸப் ஆர்ட்டிஷியன் ஸ்கீம் ஸப்ஸிடி முறையில் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. அதை இன்னும் பரவலாக விஸ்தரிக்க வேண்டும். இது கடன் கொடுப்பது, ஸப்ஸிடி கொடுப்பது ஆகிய இரண்டும் சேர்ந்தது. இதனால் குறைந்தது 10 ஏக்கர் இருப்பவர்கள்தான் பலன் அடைய முடியும். நான் அரசாங்கத்திற்கு ஒன்று எழுதி அனுப்பியிருக்கின்றேன். அதை மந்திரியும் பரிசீலனை செய்து கொண்டிருக்கின்றார்கள். "நோ பிராபிட் நோ லாஸ்" ஸ்கீம் போட்டு அனுப்பியிருக்கின்றேன். ஏழை விவசாயிகள், 1 ஏக்கர், 2 ஏக்கர் வைத்துக் கொண்டுள்ள விவசாயிகள் தனியாக பணம் கொடுத்து ஆர்ட்டிஷியன் கிணறு போடுவது, மற்றும் மின்சார வசதி பெற முடியாதபோது இதையெல்லாம் செய்து கொடுக்க ஏக்கருக்கு இவ்வளவு என்று சர்க்கார் வசூலித்துக்கொள்ளலாம். இதிலே பல விவசாயிகள் வாங்கிக்கொள்ளத் தயாராக இருக்கின்றார்கள். உதாரணமாக, பார்வதிபுரம் என்றயிடத்தில் இந்தத் திட்டம் மிகவும் வெற்றிகரமாக இருக்கின்றது. இதேமாதிரி மாவட்டத்தில் எல்லாயிடங்களிலும் செய்யலாம். மற்ற மாவட்டங்களிலும் எங்கெல்லாம் கீழே நீர் இருக்கின்றதோ அங்கெல்லாம் இந்தத் திட்டத்தை எடுத்துக் கொள்ளவேண்டுமென்று சொல்ல விரும்புகிறேன்.

மின்சார விஸ்தரிப்பில் பிற ராஜ்யங்களைவிட நம் ராஜ்யம் முன்னேறி வந்திருக்கின்றது. 1,441 மெகவாட்டுகளாய் மூன்றாவது திட்டத்தில் உயரும் என்று சொல்லியிருக்கின்றார்கள். தொழில்கள் அதிகமாகப் போகும்போது மின்சார உற்பத்தி அதிகமாகியும் தேவை அதிகமாகும் காரணத்தினால் இன்னும் மின்சாரம் அதிகமாகத் தேவைப்படுகின்றது. இன்னும் அதிகப்படுத்துவதற்கு எடுக்கவேண்டிய முயற்சியைப்பற்றி குறிப்பிட்டிருக்கின்றார்கள்.

மின்சாரம் கொடுப்பதில், முன்பு சில அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள் மினிமம் காரண்டி 45 ரூபாயாக இருந்ததை சில இடங்களிலே 35 ரூபாயாகக் குறைத்திருக்கிறார்கள் என்று. இது ஒரு நல்ல அம்சம். எல்லா இடங்களிலுமே 35 ரூபாயாக மாற்றினால் நலமாக இருக்கும்.

விதைப் பண்ணைகளுக்கு 1 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கின்றார்கள். விவசாயிகளுக்கு நல்ல விதைகள் கிடைக்க வேண்டியது மிகவும் முக்கியம். விதைப்பண்ணைகளில் நல்ல விதைகளாக உற்பத்தி செய்து விவசாயிகளுக்குக் கொடுத்தால் விவசாய உற்பத்தி பெருகும். இப்போது 1 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கின்றார்கள். அதையும் நல்ல முறையில் செலவு செய்து விவசாயிகள் பயனடையச் செய்யவேண்டும்.

இன்னும் நெய்வேலித் திட்டத்தைப்பற்றிச் சொல்லியிருக்கின்றார்கள். பிளான்படி எல்லா வேலைகளும் நடந்து வருகின்றன.

நெய்வேலியில் நான்கு திட்டங்கள் நிறைவேறி வருகின்றன. மின்சார உற்பத்தி, உரத் தொழிற்சாலை, பிரிக்கெட் செய்வது, களி மண் சுத்திகரிப்பு, லிக்னைட் எடுப்பது என்ற தொழில்களெல்லாம் அடங்கியது இந்த நெய்வேலித் திட்டம். இந்தியாவிலேயே இரண்டொரு இடங்களில்தான் பல திட்டங்களை இணைத்திருக்கிறார்கள். மற்ற இடங்களில் அந்தந்த வேலைதான் நடைபெற்று வருகின்றது. ஒரு இடத்தில் நிலக்கரி எடுப்பது மாத்திரம் இருக்கும். ஒரு இடத்தில் இரும்பு உருக்குவது மாத்திரம் இருக்கும். அப்படிக்கில்லாமல் இங்கே பல தொழில்களை ஆரம்பித்திருக்கின்றார்கள். எல்லாம் நல்ல முறையில் உரிய காலத்தில் திட்டமிட்டபடி நடந்து வருகின்றன. சேலம் உருக்குக்கு நம் சர்க்கார் இப்போது 75 லட்ச ரூபாய் ஒதுக்கியிருக்கின்றார்கள். அதற்காக தனியாக ஒரு ஆபீசரை நியமித்திருக்கின்றார்கள். அதற்காகத்தான் சீக்கிரத்தில் லிக்னைட் வேண்டுமென்று இப்போது எடுக்க முயற்சித்து வருகின்றார்கள். இந்தத் திட்டத்தையும் நல்ல முறையில் உருவாக்கினால் நம் ராஜ்யத்திற்கு நல்லது. அதையும் கவனிக்க வேண்டுமென்று சொல்ல விரும்புகின்றேன்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் 100-க்கு 80 பேர்கள் விவசாயத்தை நம்பி இருந்ததை மாற்றி இரண்டாவது திட்டத்திற்குள்ளாக அதை 70 ஆகக் குறைத்திருக்கின்றார்கள். இன்னும் 50 பேர்கள் விவசாயத்தையும், 50 பேர்கள் மற்ற தொழிலையும் நம்பி இருப்பவர்களாக இருந்தால்தான் எக்கனமிக் கண்டிஷனில் முன்னேறலாம், தொழில் துறையில் முன்னேறலாம். இதற்கு மூன்றாவது திட்டத்தில் பல வழிகள் செய்திருக்கின்றார்கள். நம்முடைய நாட்டின் முன்னேற்றத்திற்குப் பல கன ரகத் தொழில்கள் இருக்கவேண்டுமென்று உணர்ந்து அரசாங்கத்தில் பல கோடிக்கணக்கான ரூபாய்கள் ஒதுக்கியிருக்கும்போது 100-க்கு 70 பேர்கள் விவசாயத்தை நம்பி இருப்பது மாறி இன்னும் 20 பேர்கள் மற்ற தொழில்களில் ஈடுபட வாய்ப்பு ஏற்படும் என்பதில் சந்தேகமில்லை. இந்த நிலை ஏற்பட்டால்தான் விவசாயம் நல்ல முறையில் நடக்கும். விவசாயிகளும் நல்ல பலனை அடைவார்கள். மற்றவர்களும் நல்ல பலனை அடைவார்கள்.

தூத்துக்குடி திட்டம், திட்டத்தில் இடம் பெற்றிருக்கின்றது. அதையும் நான் வரவேற்கின்றேன். மற்ற மாவட்டங்களில் சிறு சிறு துறைமுகங்கள், உதாரணமாக எங்கள் மாவட்டத்தில் கடலூர், போர்டோ நோவோ போன்றவைகள் இருக்கின்றன. அதிகச் செலவில்லாமல் கொஞ்சம் கொஞ்சம் செலவு செய்து அவைகளையும் நல்ல முறையில் கவனிக்கவேண்டுமென்று சொல்ல விரும்புகின்றேன்.

தொழில் கல்வி சம்பந்தமாக நம் ராஜ்யத்திலே எல்லாத் தொழில்களிலும் பல ஸ்கூல்கள் ஏற்படுத்தப்பட்டு நடந்துகொண்டு வருகின்றன. எங்கள் மாவட்டத்தில் தொழில் கல்வி சம்பந்தப்பட்ட மட்டில் விவசாயக் கல்லூரி அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் ஆரம்பித்திருக்கின்றார்கள். அதை இன்னும் விரிவுபடுத்தலாம்.

[Sri G. Vagheesam Pillai] [21st January 1961

இப்போது 42 பிள்ளைகளுக்குத்தான் இடம் இருக்கின்றது. அதை இரட்டிக்கலாம். அங்கு ஒரு, வெட்டனரி காலேஜ் ஏற்படுத்தலாம். அதற்கு அதிகச் செலவு ஆகாது. பல்கலைக்கழகத்தினரே ஆரம்பிக்கத் தயாராக இருக்கிறார்கள். அதையும் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சொல்ல விரும்புகின்றேன்.

நாட்டிலே கட்டாயக் கல்வி முறையை அமுல் செய்வது நல்லது. கான்ஸ்ட்டிடியூஷனிலேயே சில வருஷங்களில் கட்டாயக் கல்வி ஏற்படுத்தவேண்டுமென்று போடப்பட்டிருக்கின்றது. அதையொட்டி நம் அரசாங்கத்திலே இப்போது 6 வயதுக்கு மேல் 11 வயதுக்குள்ளான பிள்ளைகள் யாவரும் படிப்பதற்கு வாய்ப்பை அளித்திருக்கின்றார்கள். அதை நான் பாராட்டுகின்றேன். கிராமங்களில் பள்ளிகளை ஏற்படுத்துவதற்கு கட்டிட வசதி செய்து கொடுக்க வேண்டும். ஸ்தல அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் இந்த திட்டங்களை எடுத்துக் கொள்ளப் போவதில்லை என்று சொன்னார்கள். மறுபடியும் எடுத்துக்கொள்வதாகச் சொல்லி மார்ச்சுக்குள் முடிக்கவேண்டும் என்று சொல்லியிருக்கின்றார்கள்.

நிரந்தரமான ஒரு கொள்கையை அனுசரிக்க வேண்டும். அப்போது ஸ்தல அபிவிருத்தித் திட்டம் நீடிக்கப்பட வேண்டும். பிளாக்கு எல்லா இடங்களிலும் இருந்தாலும்கூட, ஸ்தல அபிவிருத்தி திட்டத்தின் மூலம் செய்தால்தான் சுலபமாகவும் சீக்கிரமாகவும் செய்ய முடியும். அதை இப்போதே அரசாங்கம் யோசனை செய்து இன்னும் சில காலத்திற்கு, எல்லா வேலைகளும் காலதாமதமில்லாமல் நடைபெறுவதற்கு, குறைந்தது இரண்டு வருஷங்களுக்காவது ஸ்தல அபிவிருத்தித் திட்டத்தை நிரந்தரமாகச் செய்து, சில முக்கிய அபிவிருத்தி வேலைகளை மேற்கொண்டு நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அப்போதுதான் உடனடித் தேவைகளான பள்ளிக்கூடங்கள், ஆஸ்பத்திரிகள் போன்றவைகளை சீக்கிரம் கட்டி முடிக்க முடியும். இல்லாவிட்டால் பல ஊர்களில் பள்ளிக்கூடக் கட்டிடங்கள் இல்லாமல் இருக்கும். இவைகளையெல்லாம் உடனடியாக பூர்த்தி செய்வது முக்கியம். பிளாக்குகளிலே இப்போது பி.டபிள்யூ.டி., ஆர்.டி., என்று ரோடு இல்லாத கிராமங்களுக்கெல்லாம் உடனடியாக ரோடு வசதி செய்து கொடுக்க ரோடு டெவலப்மெண்ட் ஸ்கீம் இந்த இரண்டின் மூலமாக செய்ய திட்டமுள்ளது. இந்த இரண்டு திட்டங்களை பிளாக்கு எடுத்துக் கொள்ளாமல், ஹைவேஸ் டிபார்ட்மெண்டே எடுத்துக் கொள்ள வேண்டுமென்பது எனது விருப்பமாகும். பிளாக்குகள்தான் இதைச் செய்ய வேண்டுமென்று இருந்த போதிலும்கூட, இந்த வேலைகளை ஹைவேஸ் டிபார்ட்மெண்ட் எடுத்துக் கொண்டால், உடனடியாக ரோடு இல்லாத எல்லா கிராமங்களுக்கும் விரைவில் ரோடு வசதி ஏற்படும். அப்படிச் செயல்படத் தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

சாதாரணமாக, ஹரிஜன இலாகாவிலிருந்து பல பலன்தரக் கூடிய, நல்ல வேலைகளைச் செய்து கொண்டிருக்கிறார்கள். எங்கள் ஊரிலுள்ள அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் மாத்திரம் 200, 300

21st January 1961] [Sri G. Vagheesam Pillai]

அரிஜன பிள்ளைகள் படிக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் இந்த அரசாங்கம், அரிஜன இலாகா மூலம் பல நன்மைகளைச் செய்து கொண்டு வருகிறது.

அதேபோல் மனைக்கட்டு வேலை துரிதமாக நடந்து கொண்டு வந்த போதிலுங்கூட, சிதம்பரம் தாலுகாவைப் பொறுத்தவரையில் நஞ்சை பூமியாக இருப்பதால் இக்காரியத்தை துரிதமாகச் செய்ய முடியவில்லை. நிலங்கள் கிடைப்பதில்லை. அப்படி நிலங்கள் கிடைத்தால், பட்டா வந்து சேருவதில்லை. இப்படி பலப் பிரச்னைகள் இருப்பதினாலே, விரைவாக செயலாற்ற முடியவில்லை. அதிலும் ஏற்கனவே இரண்டு தாசில்தார்கள் சிதம்பரம் தாலுக்காவைப் பொறுத்த வரையில் வேலை செய்து கொண்டு வந்தார்கள். இப்போது ஒரு தாசில்தார் மட்டும்தான் அந்த வேலைகளை கவனித்துக்கொண்டு வருகிறார். அதனால் சற்று வேலை தாமதப் படுகிறது. ஆகவே எங்கள் தாலுக்காவுக்கு மட்டும், முன்பு இருந்தது போலவே இன்னொரு தாசில்தாரை போட்டு வேலை செய்தால், 300 கிராமங்களுக்கு மேல் சீக்கிரம் பயனடையும். இல்லாவிட்டால் 30, 40 கிராமங்களில் மட்டுமே இவ்வேலையை அமுலுக்கு கொண்டு வரமுடியும். ஆகவே உடனடியாக ஒரு தாசில்தாரை நியமித்தால், இத்திட்டத்தை வெற்றிகரமாக நடத்த முடியுமென்று சொல்லிக் கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **SRI P. R. SRINIVASA PADAYACHI** : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, நமது கவர்னர் பெருமானின் உரையை ஆதரித்து நான் சில வார்த்தைகள் பேச இருக்கின்றேன். எங்களுடைய தென் ஆற்காடு ஜில்லாவிலே கோமுகி, மணிமுத்தாறு என்ற இரண்டு திட்டத்தை இந்த ஐந்தாண்டுத் திட்டத்திலே பூர்த்தி செய்ய முயற்சி எடுத்தாக் கொண்டிருக்கிறார்கள். அதற்காக அவர்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். கடலூர் துறைமுகம் 1,200 டன் கரி இறக்குமதி செய்யும் துறைமுகமாக இன்றுள்ளது. இப்போது அதனருகில் நெய்வேலியும் சேர்ந்திருப்பதால், அந்த துறைமுகத்தை இன்னும் அதிகமாக விருத்தி செய்ய வேண்டியது அவசியம். ஆகவே அதை விருத்தி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். எங்கள் ஜில்லாவிலுள்ள பின்தங்கிய வகுப்பினர்களுக்காக கொடுக்கப் பட்ட தொகை ஒரு லட்ச ரூபாய். இந்த ஒரு லட்ச ரூபாய் போதாது என்று, இன்னும் ஒரு லட்ச ரூபாய் கொடுக்க வேண்டுமென்று பின்தங்கிய வகுப்பு லீக் கேட்டுக் கொண்டுள்ளார்கள். அதற்கும் வழிவகை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இப்போது ரோடுகள் எல்லாம் பெரும்பாலும் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டதால், சவுக்கு விலை ஏறியிருப்பதாகச் சொல்லப் பட்டது. மதராசிலே ஒரு டன் விறகு 100 ரூபாய் விற்றது என்று சில மெம்பர்கள் புகார்கள் சொன்னார்கள். இதற்கு முக்கிய காரணம், ரயில்கள் தாமதமாக வந்ததும், ரோடுகள் பழுதடைந்திருந்ததால் லாரிகள் தாமதமாக வந்ததுமே ஆகும். அதனாலேயே

[Sri P. R. Srinivasa Padayachi] [21st January 1961

விறகு விலை ஏற்றம் அடைந்து விட்டது. இந்த விறகைப் பயிரிட 7, 8 வருஷங்கள் ஆகிறது. இந்தப் பயிரை மழை இல்லாத காலங்களில் தண்ணீர் விட்டு வளர்க்க வேண்டியிருக்கிறது. இவ்வளவு கஷ்டப்பட்டு இவைகளை வளர்ப்பதால், அவர்களுக்கு நஷ்டம் வராமல் தடுக்க கண்ட்ரோல் அல்லது வேறு எவ்விதமான உபத்திரவமும் செய்யாமல் இருக்க வேண்டுமென்று நான் இந்தச் சபையைக் கேட்டுக் கொள்ளுகிறேன். இப்போது மதராசில் விறகு டன் 60 ரூபாய்க்கு விற்கிறது. அதனால் ரோடு வசதி செய்து கொடுத்து, பழுதடைந்துள்ள ரோடுகளை செப்பனிட்டு, விவசாயிகளுக்கு எவ்வித பாதகமும் இல்லாமல் நல்ல முறையில் வியாபாரம் செய்ய உதவும்படியாக கேட்டுக் கொள்ளுகிறேன்.

எங்களுடைய தென் ஆற்காடு ஜில்லாவிலே மின்சார மந்திரி கனம் ராமையா அவர்கள் இரண்டு நாள் சுற்றுப் பிரயாணம் செய்தார்கள். பலர் தங்கள் தங்கள் பகுதிக்கு வரவில்லை என்று புகார் சொன்னார்கள். ஆனால் அவர் சுற்றுப்பிரயாணம் செய்த அந்த இரண்டு நாட்களிலே பல கிராமங்களைச் சுற்றிப் பார்த்தார்கள். அப்போது அவரிடத்திலே சில குறைபாடுகள் சொல்லப்பட்டது. சிலர் விதைகள் கிடைக்கவில்லை என்று சொன்னார்கள். உடனடியாக விதைகள் கொடுக்க வேண்டுமென்று கலெக்டர், இன்னும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் கூறி, ஆங்காங்குள்ள விதைப் பண்ணைகளுக்கு உத்தரவிட்டு, ஆங்காங்குள்ள விவசாயிகளுக்கு பாதி விலையில் விதைகள் கிடைக்க ஏற்பாடு செய்தார். அதோடு பூச்சி மருந்தையும் விவசாயிகளுக்கு பாதி விலையில் கிடைக்கச் செய்தார். ஆனால், இப்போது கதிர் வரக்கூடிய நிலைமையில் உள்ள பயிர்களுக்கு சில பூச்சிகளின் தொந்தரவு ஏற்பட்டுள்ளது. அப்படியிருந்தும் அந்தந்த தாலுக்காக்களிலுள்ள ஆபீசர்கள் அவைகளை கவனித்துக் கொண்டு வருகிறார்கள். அதனால் ஒருவிதமான பாதகமும் இல்லை.

கடலூரிலே உள்ள முனிசிபாலிடி வெள்ளத்தினால் மிகவும் பாதிக்கப்பட்டது. இந்த முனிசிபாலிடியானது கடிலம் என்ற நதிக்கும், வெண்ணை ஆற்றுக்கும் மத்தியில் இருப்பதினால் பெரு வெள்ளத்தால் பாதிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆறுகளுக்கு அணையும், டவுனுக்கு ஒரு பெரிய பாதையும் போடக்கூடிய வாய்ப்பு இருக்கிறது. அதற்காக இப்போது வரக்கூடிய ஐந்தாண்டுத் திட்டத்திலே ஒரு அணைபோட்டு வெள்ளத்தை கட்டுப்படுத்துவதற்கான முயற்சியை எடுத்து, கூடிய சீக்கிரத்திலே இத்திட்டத்தை நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

சென்னை மாகாணத்திலே மின்சார வசதியானது அதிகமாகப் பரவிக் கொண்டு வருகின்றது. ஆனால் தென் ஆற்காடு ஜில்லாவிலே இவ்வசதியானது மிகவும் சொற்பமாக இருக்கிறது. இது கம்பெனியாரிடம் இருந்தபோது அதிகமாக விருத்தி செய்ய முடியாத நிலைமையில் இருந்தது. ஆனால் இப்போது இதை அரசாங்கமே எடுத்து நடத்திக் கொண்டு வருவதால், எல்லா வேலைகளும் துரிதமாக நடந்து கொண்டு வருகிறது. ஆனால், இன்னும் பல கிராமங்களுக்கும், முனிசிபாலிடிகளுக்கும் சரியான

21st January 1961] [Sri P. R. Srinivasa Padayachi]

படி மின்சாரம் சம்பந்தப்பட்ட வசதிகள் செய்யப்படவில்லை என்று சொல்லப்படுகிறது. அதே போல் சில நகரங்களுக்குக்கூட மின்சாரம் போடவில்லை என்று சொல்லப்படுகிறது. அவை களையும் உடனடியாக செய்து கொடுக்க வேண்டு மென்று மின்சார இலாகாவை நான் கேட்டுக் கொள்ளுகிறேன். 12-30 p.m. எங்கள் ஜில்லா விலே 3 பெரிய பாலங்களை அமைத்திருக்கிறார்கள். பி.டபிள்யூ. டிபார்ட்மெண்டார் பெரிய சாதனை செய்திருக்கிறார்கள். அவர்களை நாங்கள் போற்றவேண்டும். பெண்ணையாற்றிலே, திருக்கோவிலூர், அரசூர் ஆகிய இடங்களிலே இரண்டு பாலங்களை யும் கொள்ளிடத்தில் ஒரு பெரிய பாலத்தையும் அவர்கள் அமைத் திருக்கிறார்கள். தஞ்சையையும் தென் ஆற்காட்டையும் இணைக்கும் வகையில் ஒரு பாலத்தை அமைத்திருக்கிறார்கள். ஹைவேஸ் டிபார்ட்மெண்டாரும் பெரிய சாதனை செய்திருக்கிறார்கள். அவர் களையும் நாங்கள் பாராட்டவேண்டும். பெரிய பெரிய, 7 டன், 8 டன் எடையுள்ள லாரிகள் எல்லாம் ஆங்காங்குள்ள சிறிய பாலங் களில் செல்வதினால் அவைகள் மிகவும் மோசமான நிலையை அடைந்திருக்கின்றன. அந்தப் பாலங்களையும் சரிப்படுத்த வேண்டும். பெரிய லாரிகள் ரோடுகள் மூலமாக சாமான்களை எடுத்துச் சென்றால் விரைவிலே அந்தந்த முனிசிபாலிடிகளுக்கோ, பெரிய நகரங்களுக்கோ சாமான்கள் செல்ல முடிகிறது. ஹைவேஸ் டிபார்ட்மெண்டார் செய்த சாதனைகளினால்தான், அப் பேர்ப்பட்ட வசதிகளையெல்லாம் இந்த 10 ஆண்டிற்குள் செய்து முடித்தார்கள். இன்னும் அதிகமாக இந்த வசதிகளை விருத்தி செய்யவேண்டுமென்று அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

எங்கள் ஜில்லாவிலே ஊற்றுக் கிணறுகள் அதிகமாக உள்ளன. நானூறு, ஐனூறு அடிகள் போகவேண்டியிருக்கிறது. இரண்டு வருஷத்தில் 200 ஊற்றுக் கிணறுகளை அமைத்திருக்கிறார்கள். இம் மாதிரி ஊற்றுக் கிணறுகளை அதிகப்படுத்துவதற்கு, அதற்கு வேண்டிய உத்தியோகஸ்தர்களை அதிகப்படுத்தி, இன்னும் ஊற்றுக் கிணறுகளை அதிகப்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளு கிறேன்.

கடலூர் தாலூகாவிலே சுமார் 80, 85 அடி ஆழத்திலே சப்- ஆர்டிஷன் வருகிறது. சாதாரணமாக ஒரு தினத்திற்கு ஒரு காணி அல்லது 1½ காணி தானாகவே பாயக்கூடிய ஒரு சக்தி வாய்ந்த ஊற்றுக் கிணறு கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இம்மாதிரி 85 அடி ஆழத்திலே ஊற்றுக் கிணறுகளை அதிகமாக விருத்தி செய்யவேண்டும். அப்படிச் செய்தால் தென் ஆற்காடு ஜில்லாவில் ஏழைகளுக்கு அது பெரிதும் பிரயோசனப்படும். ஆகவே, ஊற்றுக் கிணறுகளை விருத்தி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கடலூர் முனிசிபாலிடியில் ஒரு பெண்கள் ஹைஸ்கூலும், டிரையினிங் ஸ்கூலும் இருக்கிறது. அதை பெண்கள் காலேஜாக ஆக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

